மலர் 14 இதழ் 176

NAVAMANI (Tamil Daily) MADRAS

6 பக்கம் 18 காசு

R--d. No. M 7897.

Phone No. 76190, 76199



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 9—3—74 சனி

வெளியூர் 10—3—74 ஞாயிறு



## சட்டசபையில் திடீர் திருப்பம்

# சீனிவாசன் ராஜினாமா

சென்னை, மார்ச் 9—துணை சபாநாயகர் பதவியை சீனிவாசன் அவராகவே முன்வந்து இன்று ராஜினாமா செய்தார். துணை சபாநாயகர் பதவியிலிருந்து அவரை விலக்குவதற்காக கொண்டுவரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானம் மீது இன்று சட்டசபையில் விவாதம் நடந்துகொண்டிருந்தபோது சீனிவாசன் திடீரென்று தமது ராஜினாமா கடிதத்தை தாக்கல் செய்தார். அது ஏற்கப்பட்டது.

எனவே நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை கந்தப்பன் வற்புறுத்தவில்லை. தானாக முன்வந்து சீனிவாசன் துணை சபாநாயகர் பதவியை ராஜினாமா செய்ததை முதல்வர் கருணாநிதி பாராட்டினார்.

நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீதான விவாதம் முடிய இருந்த நேரத்தில் மேற்படி திடீர் திருப்பம் ஏற்பட்டது.

"இங்கு நான் பலருக்கும் தர்மசங்கடத்தை உண்டாக்கும் வகையில் இப்பதவியில் நீடிக்கவிரும்பவில்லை. என்கட்சித் தலைவர் சட்டமன்ற தலைவர் ஆகியோரின் அனுமதியின் பேரில் உங்கள் அத்தனைபேரின் முன்னிலையிலும் துணை சபாநாயகர் பதவியிலிருந்து விலகுவதற்கான கடிதத்தைத் சபாநாயகரிடம் கொடுக்கிறேன்" என்று சீனிவாசன் கூறி தனது ராஜினாமா கடிதத்தை சபாநாயகரிடம் அளித்தார்.

அவர் இவ்வாறு கூறியதும் திமுக உறுப்பினர்கள் கைதட்டினர்.

நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை வலியுறுத்த வேண்டாம் என்று சீனிவாசன் கேட்டுக்கொண்டார்.

இன்று காலை நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப்பட்டு பல மணி நேரம் விவாதம் நடந்து, அதுமுடிய இருந்த நேரத்தில் சீனிவாசன் எழுந்து பேசி இவ்வாறு தனது ராஜினாமா கடிதத்தை அளித்தார்.

சீனிவாசன் தனது ராஜினாமாவை அறிவித்ததும் முதல்வர் கருணாநிதி எழுந்து "விவாதம் முடிவதற்குள்ளாக அவர் பதவி விலகல் கடிதத்தை அளித்தற்காகப் பாராட்டுகிறேன்" என்றார்.

"இது பிரிவு உபசாரம் போல உள்ளது என்று சீனிவாசன் கூறினார்- பிரிவு உபசாரம் என்றால் போனவர்கள் திரும்பி வருவார்கள் என்ற நம்பிக்கையில் நடத்தப்படுவதாகும்" என்றும் கருணாநிதி கூறினார்.

"விலகல் கடிதத்தை ஏற்று விவாதத்தை இத்துடன் முடித்துக்கொள்ளலாம் என்றும் அவர் கூறினார்.

பின்னர் கந்தப்பன் தனது தீர்மானத்தை வலியுறுத்தவில்லை.

சீனிவாசனின் ராஜினாமா ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்டதாக சபாநாயகர் அறிவித்தார்

### சீனிவாசன் பேச்சு

தனது ராஜினாமா கடிதத்தை தாக்கல் செய்வதற்கு முன்னதாக சீனிவாசன் பேசுகையில் "இது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீதான விவாதமா அல்லது பிரிவு உபசாரமா என்று நினைக்கும் வகையில் இங்கு பலர் என்னைப்பற்றிக் குறிப்பிட்டனர் என்றார்.

நான் தெளிவாக முடிவு செய்துதான் கட்சி மாறினேன் என்றார்.

### முடி இறக்குவிழா

"மக்கள் மன்றம் தீர்ப்புக் கூறிய பிறகுதான் கட்சி மாறினேன். இன்றைய நிகழ்ச்சியை முடிஇறக்குவிழாவாகக் கருதுகிறேன்.

அதற்கு என் சுற்றத்தார் போல நீங்கள் கூடியிருக்கிறீர்கள். இனியும் பதவியில் இருந்தால் மக்கள் மத்தியில் மாசு ஏற்படும்" என்றும் சீனிவாசன் கூறினார்.

"பதவி கிடைக்கவில்லை என்பதற்காக வெளியேறினேன் என்று சொல்லலாம். நான் இப்போது விடுதலை பெற்றுவிட்டேன்" என்றும் அவர் கூறினார்.

6-ம் பத்தித் தொடர்ச்சி

வன் நான் அல்ல.

சீனிவாசன் (குறுக்கிட்டு): நான் அமைச்சர் பதவிக்கு அலைந்தேனா என்பது முதலமைச்சருக்குத் தெரியும். ஏனேதானேக்களுக்கு தெரியாது. உதவி சபாநாயகர் பதவிக்காக நீங்கள் எந்தெந்த மாடி ஏறினீர்கள் என்பது எனக்குத் தெரியும்.

லத்தீப்: கொள்கையை விட்டுவிட்டு நான் இருக்க மாட்டேன், உயிரை வேண்டுமானால் விடுவேன். எந்த மாடியிலும் நான் ஏறவில்லை. பதவியை தூசாக நான் மதிக்கிறேன். பிறந்தது முஸலிம் லீக்கில். வாழ்வதும் முஸ்லிம் லீக்கில், இறப்பதும் முஸ்லிம் லீக்கில் தான். காலம் பதில் சொல்லும். சீனிவாசன் காத்திருக்கட்டும்.

புதுவையில் எஸ். ராமசாமி முதல் அமைச்சராகப் பதவி ஏற்றபோது எடுத்தப்படம்.

## ஹாண்டே ஒழுங்கு பிரச்னை

# சீனிவாசன் விவகாரம்: காரசார விவாதம்

சென்னை, மார்ச் 9—இன்று சட்டசபையில் துணை சபாநாயகர் சீனிவாசன்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. இதையொட்டி சபையில் காரசார விவாதம் நடந்தது.

இன்று சட்டசபையில் கேள்வி நேரம் முடிந்ததும் துணை சபாநாயகர் சீனிவாசன் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை முன்மொழிய கந்தப்பனை சபாநாயகர் புலவர் கோவிந்தன் அழைத்தார். (கேள்வி நேரம் காலை 11-18 மணிக்கு முடிந்தது)

நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை முன்மொழிய கந்தப்பன் அழைக்கப்பட்டவுடனேயே, டாக்டர் ஹாண்டே முனுஆதி, கோவை செழியன் வெங்கடசாமி ஆகியோர் ஒழுங்குப் பிரச்னை கிளப்ப ஒரே சமயத்தில் எழுந்தார்கள்.

### ஒழுங்குப் பிரச்னை

முதலில் வெங்கடசாமி, (சுதந்திரா) தனது ஒழுங்குப் பிரச்னையைக் கிளப்பினார். வெங்கடசாமி கூறியதாவது:

ஒரு உறுப்பினர், தம் மீது நம்பிக்கையில்லை என்று தெரிவித்தால்கூட நான் பதவியில் இருக்க மாட்டேன் என்று சீனிவாசன் இந்த சபையில் சொல்லியிருக்கிறார். அதுபோல இப்போதும் அவர் சொல்லிவிட்டால், விவாதமே தேவையில்லை நேரம் மிச்சமாகும். இது பற்றி சீனிவாசன்தான் பதில் சொல்ல வேண்டும்.

### சீனிவாசன் பதில்

அதற்கு சீனிவாசன் பதில் கூறியதாவது:—

"நேரத்தை மிச்சப்படுத்தலாம் என்று சுதந்திரா கட்சித் தலைவர் கூறுகிறார். 4-ந் தேதியே நான் ஒரு அறிக்கை கொடுத்துவிட்டு துணை சபாநாயகர் பதவியிலிருந்து விலகிவிடலாம் என்று நினைத்திருந்தேன். ஆனால், நான் கட்சியிலிருந்து விலகியதும், போட்டி போட்டுக்கொண்டு என்னை விலக்குவதாக பத்திரிகைகளில் விதிமுறைக்கு மாறாக அறிக்கைகள் தரப்பட்டன, நான் நிச்சயமாக சொல்வது என்னவென்றால் அண்ணன் மதியழகன் செய்த மாதிரி நான் செய்யமாட்டேன் என்பதாகும்.

### சுதந்திரா ஆளுங் கட்சியோடு சேரலாம்

சுதந்திரா கட்சித் தலைவருக்கு நான் பணிவாகத் தெரி

5-ம் பக்கம் பார்க்க

டாக்சி—ஆட்டோ தொழிலாளர்கள்

## கருணாநிதிக்கு கோரிக்கை

சென்னை, மார்ச் 9—தமிழ் நாடு டாக்சி - ஆட்டோ தொழிலாளர் முன்னேற்ற சங்கம், முதல் அமைச்சர் கருணாநிதிக்கு ஒரு கோரிக்கை மனு அனுப்பியுள்ளனனர். அந்த மனுவில் கூறப்பட்டுள்ளதாவது:—

பெட்ரோல், ஆயில் விலை உயர்வு காரணத்தால் டாக்ஸி - ஆட்டோ கட்டணத்தை உயர்த்த வேண்டிய நிர்பந்தம் தமிழ்நாடு அரசுக்கு ஏற்பட்டு இருக்கிறது. ஏற்கனவே கட்டண உயர்வால் டாக்ஸி-ஆஸ்டோ வருமானம் குறைந்து. தொழில் பாதிக்கப்பட்டுள்ளது. அதே நேரத்தில் கட்டணத்தை உயர்த்தாமலும், தொழிலை நடத்த முடியாத நிலையில் உள்ளோம். ஆகவே தமிழக அரசு ஏற்கனவே அறிவித்த கட்டண உயர்வினல் உரிமையாளர்களுக்கோ, தொழிலாளர்களுக்கோ, பொது மக்களுக்கோ எந்தவித பயனுமில்லை என இச்செயற்குழு கருதுகிறது. ஆகவே பொது மக்களின் நன்மையைக் கருதி, டாக்ஸிக்கு குறைந்த தூரக் கட்டணம் 1 ரூபாய் ஆகவும், கிலோமீட்டர் ஒன்றுக்கு 1 ரூபாய் ஆகவும். அதேபோல் ஆட்டோ ரிக்ஷாவிற்கு குறைந்த தூர கட்டணம் 50 பைசா ஆகவும், கிலோ மீட்டர் ஒன்றுக்கு 50 பைசா ஆகவும் நிர்ணயிக்கும்படி தமிழக அரசை இச்செயற்குழு மிகவும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறது.

அப்படி அல்லாமல் டாக்ஸிக்கு குறைந்த தூர கட்டணத்தை 1 ரூபாய்க்கு மேலும், ஆட்டோ விற்கு குறைந்த தூர கட்டணத்தை 50பைசாவிற்கு மேலும் நிர்ணயிக்கப்பட்டால் டாக்ஸி—ஆட்டோ தொழிலாளர்கள் பெரிதும் பாதிக்கப்படுவார்கள். ஆகையால் இச் சங்கம் போராட வேண்டிய நிலை ஏற்படும் என்பதை இச் செயற்குழு பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறது.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## "அ. தி. மு. க. ஒத்துழைப்புடன்தான் தி. மு. க.வை எதிர்க்க முடியும்"

# இந்திராவுக்கு எம். ஜி. ஆர். பாராட்டு; எம். ஜி. ஆருக்கு இந்திரா பாராட்டு

## டெல்லியில் நடந்தது என்ன?

புதுடெல்லி, மார்ச் 9—நேற்று டெல்லியில் பிரதமர் இந்திராவும் அ. தி. மு. க. பொதுச் செயலாளர் எம். ஜி. ஆரும், சுமார் அரை மணி நேரம் சந்தித்துப் பேசினார்கள். அப்போது "எம். ஜி. ஆரை இந்திரா பாராட்டினார்; இந்திராவை எம்.ஜி.ஆர். பாராட்டினார்" என்று எம்.ஜி.ஆர். தெரிவித்தார்.

"தமிழ் நாட்டில் பழைய காங்கிரசுக்குச் செல்வாக்கு இல்லை. ஆனால் இ. காங்கிரசுக்கு செல்வாக்கு இருக்கிறது." என்றும் எம். ஜி. ஆர். இந்திராவிடம் கூறினார். "தி. மு. க.வை எதிர்ப்பதென்றால், அ. தி. மு. க.வின் ஒத்துழைப்போடுதான் எதிர்க்க முடியும்" என்றும் இந்திராவிடம் எம்.ஜி.ஆர். கூறியிருப்பதாகத் தெரிகிறது.





புதுவையில் அ. தி. மு. க. ஆட்சியை ஆதரிக்கக் கோரியும், வருகிற பொதுத் தேர்தலில் அ. தி. மு. க. இந்திரா காங்கிரஸ் உறவு ஏற்படுவது குறித்தும் இந்திராவும் எம். ஜி. ஆரும் பேசியிருப்பதாக நம்பகமான டெல்லி வட்டாரங்கள் கருத்துத் தெரிவித்துள்ளன.

இந்திராவைச் சந்தித்த பிறகு எம். ஜி. ஆர். நிருபர்களிடம் கூறியதாவது:—

"உத்தரப்பிரதேச தேர்தல் இ. காங்கிரஸ் வெற்றி பெற்றதற்கு என் பாராட்டுதலை இந்திரா காந்தியிடம் தெரிவித்தேன்.

புதுவையில் அ. தி. மு. க. வெற்றி பெற்றதற்கு இந்திரா பாராட்டினார்.

தமிழ்நாட்டிலும், பாண்டிச்சேரியிலும் இந்திரா காந்திக்கு ஆதரவு அதிகரித்துள்ளது. காமராஜருக்கு ஆதரவுஇல்லை என்பது சமீபத்தில் நடந்த தேர்தல் முடிவுகள் எடுத்துக் காட்டுகின்றன.

ப. காங்கிரசுடன் கூட்டு சேராமல் இ. காங்கிரஸ் தனித்து போட்டியிட்டு இருந்தால் இன்னும் அதிக இடங்கள் கிடைத்திருக்கும் என்றும் கூறினேன்.

அ. தி. மு. க. நன்மைகள் செய்தால், இந்திரா காங்கிரஸ் அதற்கு இடையூறாக செயல்படாது என்று நம்புகிறேன்.

பாண்டிச்சேரியில் மட்டும் இன்றி, எல்லா மாநிலங்களிலும் அரசு நிர்வாகம் ஒழுங்காக நடைபெறவேண்டும் என்றே இந்திராகாந்தி விரும்புகிறார் என்று நான் நம்புகிறேன்.

இவ்வாறு எம். ஜி. ஆர். கூறினார்.

மேலும் அவர் கூறுகையில் இந்திராவின் பெருந்தன்மை தம்மைக் கவர்ந்தது என்றும் குறிப்பிட்டார்.

தமிழ்நாட்டில் அ. தி. மு. க.வின் ஒத்துழைப்பு இன்றி தி. மு. க வை எதிர்க்க முடியாது என்றும் எம். ஜி. ஆர். இந்திராவிடம் கூறியிருப்பதாகத் தெரிகிறது.

### 25-ம் தேதி சட்டசபை

24 அல்லது 25-ம் தேதி புதுவை சட்டசபை கூடும் என்றும் எம். ஜி. ஆர். தெரிவித்தார்.

## "மந்திரி பதவி கேட்டுத்தான் கட்சி மாறினார்"

# சீனிவாசன் - லத்தீப் கடும் மோதல்

சென்னை, மார்ச் 9—சீனிவாசன் பிரச்னையில் இன்று சட்டசபையில் நடந்த விவாதத்தின்போது, லத்தீபுக்கும் சீனிவாசனுக்கும் கடும் விவாதம் நடைபெற்றது. அதன் விவரம் வருமாறு:—

அனந்தநாயகி (புது காங்கிரஸ்): 1967-ம் ஆண்டுக்குப்பிறகு தமிழ்நாட்டு சபாநாயகர்களின் பதவிக் காலம் பாதியிலேயே முடிகிறதுஎன்ற அவலநிலை ஏற்பட்டுவிட்டது. சபாநாயகரை கட்சி மாற்ச கரியங்களுக்குஇழுக்கிறார்கள்"

ஜனநாயக மரபு செத்துச் செத்து பிழைக்கிறது. இங்கிலாந்திலிருக்கும் மரபு இங்கு மதிக்கப்படுவதில்லை.

கணபதி (தி. மு. க.) (குறுக்கிட்டு):— அங்கு கட்சி மாறியவர்கள் ராஜினாமா செய்கிறார்கள். இங்கு அந்த மாதிரி செய்கிறார்களா?

அனந்தநாயகி:— அப்படி ஒரு சம்பவத்தை உங்களால் குறிப்பிட முடியுமா? உங்கள் கட்சிக்கு வந்தவர்கள் ராஜினாமா செய்யட்டும் நானும் ராஜினாமா செய்கிறேன். நான் ஒரே கட்சியில்தான் இருக்கிறேன்.

நம்பிக்கைஇல்லாத்தீர்மானத்தில் காரணம்காட்ட வேண்டாமா?

முதலமைச்சர் கருணாநிதி (குறுக்கிட்டு): முன்பு புலவர் சபாநாயகராக இருந்தபோது நம்பிக்கையில்லாத்தீர்மானம் கொண்டுவந்தீர்களே. அதில் காரணம் கூறியிருக்கிறீர்களா?

அனந்தநாயகி:— விவாதத்திற்கு வந்திருந்தால் சொல்லியிருப்போம். நீங்கள் அதைக் கூட சொல்லவில்லையே.

துரை முருகன்: (தி.மு க) (குறுக்கிட்டு), தைரியம் இல்லாமல் ஏன் வாபஸ் வாங்கினீர்கள்?

அனந்தநாயகி:— தைரியத்திற்கு குறைவு இல்லை. சபாநாயகர் பதவிக்கு மதிப்பு அளிக்கவே வாபஸ் வாங்கினோம். காரணம் தராதது மிக மிக வருந்தத்தக்கது.

லத்தீப்(மு.லீக்);-தேர்தலில் வெற்றி பெற்று அமைச்சர் பதவிக்காக அலைந்து திரிந்த

3-ம் பத்தி பார்க்க

# புதுவை இ. காங்கிரஸ் நிலை என்ன?

புதுவை, மார்ச் 9—அண்ணா தி.மு க.வின் பெரும்பான்மை பலத்தைக் காட்ட, புதுவை சட்டசபையை இன்னும் மூன்று நாட்களில் கூட்ட வேண்டும் என்று தி. மு. க. தலைவர் பரூக் உட்பட, புது காங்கிரஸ் தலைவர் தங்காந்த ராஜூம் கோரியிருப்பது தெரிந்ததே.

இதுபற்றிய மேல் விவரம் வருமாறு:—

இந்திரா, எம். ஜி. ஆருக்கு (அ. தி. மு. க. வுக்கு) ஆதரவு தரக்கூடிய சூழ்நிலை ஏற்பட்டால், பெரும்பான்மையான இ. காங்கிரஸ் புதுவைமாநில எம். எல். ஏ.க்கள், இ. காங்கிரசில் இருந்து விலகக்கூடும் என்று தெரிகிறது.

அ. தி. மு. க.வுக்கு ஆதரவு தருவது சரி என்று எண்ணுகின்ற இ. காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் கட்சிமாறி அ. தி. மு. க. வில் சேரக் கூடும் என்று தெரிகிறது.

நிச்சயமாக ஒரு புது காங்கிரஸ் எம்.எல்.ஏ. ஒருவர் கட்சிமாறி அ. தி. மு. க.வில் சேருவார் என்று புதுவை வட்டாரத்தில் பரவலாகப் பேசப்படுகிறது.

# கணவன் முன்னிலையில் கருப்பாயி தற்கொலை

கோவை, மார்ச் 9—கணவன் டீ வாங்கி தர மறுத்ததால் மனம் உடைந்த மனைவி கிணற்றில்குதித்து தற்கொலை செய்துகொண்டாள்.

இச்சம்பவம் பற்றி கூறப்படுவதாவது:—

கோவை மாவட்டம் சத்தியமங்கலம் அருகில் உள்ள வேடநகர் என்ற ஊரைச் சேர்ந்தவர் ராஜு. கூலி வேலைசெய்து பிழைத்து வந்தார்.

இவருடைய மனைவி கருப்பாயம்மாள். இவர்களுக்கு இரண்டு ஆண் குழந்தைகளும், ஒரு பெண் குழந்தையும் உண்டு.

சம்பவத்தன்று கணவன் மனைவி இருவரும் சத்தியமங்கலத்தில் விறகு விற்றுவிட்டு ஊருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தனர்.

வரும் வழியில் சிக்கரசம் பாளையத்திலுள்ள தேனீர் விடுதி ஒன்றில் கருப்பாயம்மாள் கணவனிடம் டீ வாங்கித் தரும்படி கேட்டாளாம். கணவன் ராஜு டீ வாங்கித் தர மறுத்து அருகிலிருந்த மரத்தடியில் சென்று உட்கார்ந்துவிட்டாராம்.

உடனே மனம் உடைந்த கருப்பாயம்மாள் ஓடிப்போய் அருகில் இருந்த தோட்டக் கிணற்றில்குதித்து தற்கொலை செய்து கொண்டாள்.

இதுபற்றி போலீசார் புலன் விசாரணை செய்து வருகின்றனர்.

# டாக்சி - ஆட்டோ கட்டண விகிதத்தை மாற்ற கோரிக்கை

**சென்னை, மார்ச். 9—"டாக்சி, ஆட்டோ ரிக்ஷாக் களுக்கு அரசு நிர்ணயித்துள்ள கட்டணத்தை மாற்றி அமைக்க வேண்டும்" என்று தமிழ்நாடு டாக்சி ஆட்டோ ரிக்ஷா டிரைவர்கள் சங்கம் அரசுக்கு கோரிக்கை விடுத் துள்ளது.**

இது குறித்து தமிழ்நாடு டாக்சி ஆட்டோ டிரைவர் சங்க பொதுச் செயலாளர் நல்லையா அறிக்கை ஒன்று வெளியிட்டுள்ளார். அதில் அவர் கூறியிருப்பதாவது:—

டாக்சிகளுக்கும், ஆட்டோக் களுக்கும் புதிய கட்டண விகிதங்களை அரசாங்கம் அறிவித் திருப்பதை அறியவருகிறோம்.

## எதிர்க்கவேண்டிய நிலை

டாக்சிக்கு குறைந்தபட்ச கட்டணம்(Minimum)ரூ1.70 ஆகவும், ஒரு கிலோ மீட்ட ருக்கு 0.90 காசாக உயர்த்த இருப்பதை சங்கம் ஆட்சேபிக் கிறது. ஆட்டோவுக்கு உயர்த் தியிருக்கக் கூடிய கட்டணம் நிச்சயமாக போதாது என்று கடுமையாக எதிர்க்கவேண் டிய நிலை ஏற்பட்டுள்ளது. ஒரு கிலோ மீட்டருக்கு ஐந்து பைசா வீதம் அதாவது 35 காசிலிருந்து 40 காசாக உயர்த்தப்பட்டு இருக்கிறது. குறைந்தபட்சக் கட்டணம் 70 காசிலிருந்து 80 காசாக உயர்த்தப்பட்டு இருக்கிறது. இந்த புதிய கட்டண விகிதப் படி ஆட்டோவுக்குநாளொன் றுக்கு ஐந்து ரூபாயிலிருந்து, ஆறு ரூபாய்வரை அதிகமாக கிடைக்கலாம் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

## அதிக செலவு

மார்ச்சு மாதம் 2-ந்தேதி முதல் ஆட்டோவிற்கு உப யோகப்படுத்தும் எண்ணெய் விலை லிட்டர் ஒன்றுக்கு ஏறத்தாழ ஆறு ரூபாய் உயர்த்தப்பட்டு இருக்கிறது. அதே நேரத்தில் லிட்டர் ஒன்றுக்கு பெட்ரோலின் விலை 35 பைசா வீதம் உயர்த்தப் பட்டு இருப்பதால் ஒரு நாளைக்கு ஆட்டோவை ஓட்டுவதற்கு உபயோகப் படுத்தும் எண்ணெய் விலையில் கிட்டத்தட்ட ரூபாய் 9 அதிக மாக செலவாகிறது.

## உடனடி நடவடிக்கை

எனவே தற்சமயம் உயர்த்தி யிருக்கும் கட்டணம்போதாது என்று கருதுவதால் உடனடி யாக அரசு கிலோ மீட்டருக்கு 50 காசு வீதமும், குறைந்த பட்ச கட்டணம் (Minimum Fare) ஒரு ரூபாயாகவும் மாற்றி அமைக்க வேண்டும் என்று சங்கம் கோருகிறது.

கட்டணங்களை மாற்றி அமைப்பதில் அரசு காலதாம தம் செய்தால் தொழிலாளி கள் வண்டி ஓட்டி பிழைப்பு நடத்துவதற்கு இடையூறு செய்ததாகவேசங்கம்கருதும்.

மேற்கண்டவாறு தமது அறிக்கையில் நல்லையா குறிப் பிட்டுள்ளார்.

5-ம் பத்தி தொடர்ச்சி

அமைச்சர்கள் அன்பழகன், சத்தியவாணி முத்து அன்பில் தர்மலிங்கம், சாதிக்பாட்சா.

கேள்வி; ஆட்சி மன்றக் குழு உறுப்பினர்களில் வராத வர்கள் யார்?

பதில்:— மதுரை முத்து

கேள்வி:—என்ன காரணம்?

பதில்:—ஒன்றுமில்லை.

இவ்வாறு பத்திரிகையாளர் களின் கேள்விகளுக்கு தலைமை நிலைய தொழிற்சங்க செயலா ளர் வீராசாமி பதில் அளித் தார்.

## தேதி

டெல்லி மேல்-சபை, தமிழக மேல்-சபை ஆகியவற்றுக்கு போட்டியிடும் வேட்பாளர் கள் மனு தாக்கல் செய்ய கடைசி தேதி மார்ச் 18.

மனுக்கள் பரிசீலனை மார்ச் 19.

வாபஸ் பெற கடைசி தேதி மார்ச் 21.

போட்டி இருந்தால் 29-ந் தேதி ஓட்டெடுப்பு நடை பெறும்.

# சென்னையில் டாக்சி ஆட்டோ ஓடுகிறது

சென்னை, மார்ச் 9— சென்னையில் இன்று (சனிக் கிழமை) வாடகைக் கார் களும் (டாக்சி) ஆட்டோ ரிக்ஷாக்களும் ஓடுகிறது.

டாக்சி டிரைவர்கள் சங்க பிரதிநிதிகள் நேற்று நள்ளிரவு அமைச்சர் ராசாராமை சந் தித்துப் பேசினர்கள். அவர் களுடைய கோரிக்கைகளை 2 நாட்களில் தீர்த்து வைப்ப தாக அவர் உறுதி அளித் தார். அதைத் தொடர்ந்து வேலை—நிறுத்தம் வாபஸ் பெறப்பட்டது.

டாக்சி, ஆட்டோ ரிக்ஷா கட்டணத்தை உயர்த்தக் கோரி, கடந்த 2 நாட்களாக வேலை—நிறுத்தம் நடந்தது.

## நீர் மட்டம்

சென்னை, மார்ச். 8—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 6·13 | மீட்டர் |
| பெரியாறு | 4·30 | ,, |
| வைகை | 16·85 | ,, |
| பாபநாசம் | 30·47 | ,, |
| கிருஷ்ணகிரி | 13·17 | ,, |
| சாத்தனூர் | 30·13 | ,, |
| மணிமுத்தாறு | 31·54 | ,, |
| பேச்சிப்பாறை | 1·10 | ,, |
| பெருஞ்சாணி | 0·15 | ,, |

## தமிழக மேல்சபை தேர்தல், டெல்லி மேல்சபை தேர்தல்:

# தி. மு. கழக வேட்பாளர் பட்டியல் அறிவிப்பு

**சென்னை, மார்ச் 9—தமிழக மேல்சபையில் 6 இடங்களுக்கும், டெல்லி மேல்சபையில் 4 இடங்களுக்கும் தி. மு. கழகத்தின் சார்பில் போட்டியிடும் வேட்பாளர்களின் பெயர் அறிவிக்கப்பட்டுள்ளன.**

தமிழ்நாடுமேல்சபையில், 7 இடங்கள் காலி ஆகின்றன. தமிழகசட்டசபைஉறுப்பினர் கள்ஓட்டுப்போட்டு இவர்களை தேர்ந்து எடுக்கவேண்டும்.

இதில் போட்டியிடும் தி. மு. க. வேட்பாளர்களின் பெயர்களை, தி. மு. க. ஆட்சி மன்ற குழு நேற்று அறிவித் தது.

வேட்பாளர் பட்டியல்:—

1. செல்வி தமிழரசு பி. ஏ. (தி. மு. க. பேச்சாளர்)
2. இரா. இளம்பரிதி, தி. மு. க. போராட்டங்களில் சிறை சென்றவர்.)
3. கடையநல்லூர் திரா விடமணி (மிகப் பிற்பட்ட சமூகத்தைச் சேர்ந்தவர்.)
4. திண்டிவனம்தங்கவேலு; (சுயமரியாதை இயக்க காலம் தொட்டு, தி. மு. க. தொண் டர்.)
5. பி. எலமாந்தா எம். ஏ. (நகரசுத்தி தொழிலாளர். ஆதி ஆந்திர அரிஜன மகா சபையின் பொதுச் செயலா ளர்.)

(முஸ்லிம் லீக் கட்சிக்கு ஒரு இடம் ஒதுக்கப்பட்டுள்ளது.)

மேல்-சபையில், சா. கணே சன் (சுதந்.) அப்துல் வகாப் (முஸ்லிம் லீக்), தங்க பாண்டி யன் (தி. மு. க.), ஜி. பராங் குசம் (தி. மு. க.), டி. கே. பொன்னுவேல் (தி.மு.க.), காட்டூர் கோபால் (தி.மு.க.) ஆகிய 6 பேர்களின் பதவிக் காலம் இம்மாதம் முடிவடை கிறது.

மேற்கண்ட 6 இடங்களுக் கும், கிருஷ்ணசாமி நாயுடு (ப. காங்) மரணம் அடைந்த தால் ஏற்பட்ட காலி இடத் திற்கும் புதிய உறுப்பினர்கள் (மொத்தம் 7 பேர்) தேர்ந்து எடுக்கப்படுவார்கள்.

## டெல்லி மேல்சபை

டெல்லிமேல்சபையில் தமிழ் நாட்டைச் சேர்ந்த தில்லை வில்லாளன் (தி மு க). ஜி. ஏ. அப்பன் (தி.மு.க.) கே. எஸ். ராமசாமி (இ. காங்), காஜா மொய்தீன் (முஸ்லிம் (லீக்), எம். ரத்னசாமி (சுதந்), எம். ஆர். வெங்கடராமன் (இ. கம்) ஆகிய 6 உறுப்பினர் களின் பதவிக்காலம் முடி வடைகிறது.

(டெல்லி மேல்சபை உறுப் பினர்களையும், தமிழக சட்ட சபை உறுப்பினர்கள் ஓட்டுப் போட்டு தேர்ந்து எடுப்பார் கள்.)

இதற்காக நடைபெறும் தேர்தலில் போட்டியிடும் தி. மு. க. வேட்பாளர்கள் விவரம் வருமாறு:—

(1) வலம்ரிஜான் எம்.ஏ., பி.எல். சத்தோலிக்க மீனவர் சமூகத்தைச் சேர்ந்தவர். வக் கீல்,பேச்சாளர், எழுத்தாளர்.

(2) திண்டுக்கல் காதர் ஷா பி. ஏ. இந்தி எதிர்ப்பு போரில் ஓர் ஆண்டு சிறை சென்றவர்.

(3) ஜி. லெட்சுமணன், தபால்—தந்தி இலாகா மூன் ரும் பிரிவு ஊழியர் சங்கத் தின் மாநில செயலாளர்.

(4) சி. டி. நடராஜன் எம். ஏ., பி. எல். (சட்டப்பேரவை முன்னாள் செயலாளர், மறைந்த அண்ணாவின் நண்பர்.)

(முஸ்லிம் லீக் கட்சிக்கு ஒரு இடம் ஒதுக்கப்பட்டுள்ளது.)

## அறிவிப்பு

தி. மு. க. ஆட்சி மன்ற கூட்டம் முடிந்தபின், மேற் கண்ட தகவலை தி. மு. க. தலைமை நிலைய செயலாளர் கள் ஆற்காடு வீராசாமியும், சிட்டிபாபுவும் அறிவித்தார் கள்.

இதன்பின் நிருபர்கள் கேட்ட கேள்விகளும், அவற் றுக்கு அளிக்கப்பட்ட பதில் களும் வருமாறு:—

கேள்வி:—டெல்லி மேல் சபைக்கு ஒரு இடமும், தமிழக மேல்-சபைக்கு ஒரு இடமும் இன்னமும் பாக்கியிருக்கிறதே அதுபற்றி என்ன முடிவு?

பதில் :—எங்களுக்கு உள்ள வாக்குகளின் அளவை வைத் துக் கொண்டு, தி. மு. கழகத் தின் அதிகாரப்பூர்வமான பட்டியல் வெளியிடப்பட்டு இருக்கிறது.

கேள்வி:—மீதமுள்ள அந்த இடங்களுக்கு அதிகாரப்பூர்வ மாக தி. மு. கழகம் வேட்பா ளரை நிறுத்துவதில்லை என்று முடிவெடுத்து உள்ளதா?

பதில்:- அதுகுறித்து பிறகு யோசிக்கப்படும்.

## நியமன உறுப்பினர்கள்

கேள்வி:- கவர்னரால் நிய மிக்கப்படும் மூன்று வேட்பா ளர்கள் குறித்து முடிவு எடுக் கப்பட்டு விட்டதா?

பதில்:- கவர்னரால் நிய மிக்கப்படும் அந்த மூன்று வேட்பாளர்களின் நியமனங் களை கவர்னர்தான் அறிவிப் பார்.

## வந்தவர்கள்

கேள்வி—ஆட்சி மன்றக் குழுவிற்கு யார் யார் வந் திருந்தார்கள்?

பதில்; கழகத்தலைவர்கருணா நிதி, தி. மு. கழகப் பொதுச் செயலாளர் நெடுஞ்செழியன்,

1-ம் பத்தி பார்க்க

# அணையே கட்டாத ஆட்சி: காங்கிரஸ் எம். எல். ஏ. தாக்கு

சென்னை, மார்ச் 9— "தமிழக அரசு பட்ஜெட்டில் ஒரு அணைக்கூடக் கட்டப்படு வதாக கூறப்படவில்லை" என்று பழைய காங்கிரஸ் எம். எல். ஏ. குருசாமி குற் றம் சாட்டினார்.

இதுகுறித்து சட்டசபை யில் அவர் பேசியதாவது :—

காங்கிரஸ் ஆட்சிக்காலத்தில் ரூ. 194 கோடி பட்ஜெட்டில் பல அணைகளைக் கட்டினார்கள். ஆனால் இப்போது ரூ. 470 கோடி பட்ஜெட்டில் எந்த அணையும் கட்டப்படுவதாக தெரியவில்லை. விவசாயத் துக்கு தேவையான பொருள் கள் விவசாயிகளுக்கு போய்ச் சேருவதில்லை.

அரிஷ்டத்துக்கு50 சதவிகித வரிகூட விதிக்கலாம். ஆனால் வெளிநாட்டு மதுவகைகளை எடுத்துவிடவேண்டும். கட்ட பொம்மன், திருவள்ளுவருக்கு நினைவுச் சின்னம்எழுப்புவதை வரவேற்கிறேன்.

இவ்வாறு குருசாமி பேசி னார்.

## தேவேந்திரன் பெருமை

தம்பி தேவேந்திரன் (தி.மு.க.) பேசியதாவது;— உணவுத் தானியங்களை அண்டை மாநிலங்களுக்குக் கொடுத்து தனிப்பெருமை பெற்றிருக்கிறோம்.

பேரு பெத்த பேரு ஒன்றும் லேது என்று சொல்வார்கள். என் தொகுதியான நன்னிலம் ஒரு தாலுகாவின் தலைநகர். ஆனால் அங்கே ஒன்றும் இல்லை. மிகவும் கஷ்டப்பட்டு ஒரு தீயணைப்பு நிலையம் அமைக்க ஏற்பாடு செய்தேன்.

இதைப் பற்றி எவ்வளவோ பேசி—சொல்லிப்பார்த்து விட்டேன் அங்கே ஒரு மாஜிஸ் திரேட் கோர்ட் ஏற்படுத்த வேண்டும்.

என் தொகுதியில் வாஞ்சூர் என்ற பகுதியில் ஒரு குடம் தண்ணீர்ஒருஅணா,இரண்டணா என்றுவிற்கப்படுகிறது. அங்கே தண்ணீர் உப்பாக இருப்ப தால் வெளியே இருந்து வர வேண்டி இருக்கிறது.

20ம் நூற்றாண்டின் தமிழ் நாட்டுத்தலைவன் கருணாநிதி. தமிழகத்தின் ரட்சகன். அவர் ஆட்சி கண்டு பெருமை படு கிறேன்.

இவ்வாறு தம்பி தேவேந் திரன் பேசினார்.

## விரைவில் செய்யும் முதல்வர்

கு. ராஜமாணிக்கம் (தி. மு. க.) பேசியதாவது:— நாக்கு அடிப்படையான பல பொருள்களும் கிடைக்காத தால்தான் நாம் மாநில சுயாட்சி கேட்கிறோம். முன் னர் காங்கிரஸ் ஆட்சியாளர் ஆகட்டும் பார்க்கலாம் என்று சொல்லிக் கொண்டிருந்தார் கள். ஆனால் நமது முதல்வர் எல்லாம் விரைவில் செய்து வருகிறார் என்றார் ராஜ மாணிக்கம்.

## கணபதி பேச்சு

டி. கணபதி (தி. மு. க.) பேசியதாவது:— இதுவரை அரசாங்க ஊழியர், ஆசிரியர்களுக்கு மட்டும் கிடைத்துவந்த ஓய்வு ஊதிய திட்டம் ஒரு நல்ல சமுதாயப் பாதுகாப்பு திட்டமாகும். இதனால் பாட்டாளிகள் எல் லாம் பயன் அடையலாம் என்றார் கணபதி.

7-ம் பத்தித் தொடர்ச்சி

7. பிளாக் நைட் 51-00 — சுகுமார்—7
8. அஸ்வதி 50-00 — மஞசே—10
9. எக்ஸ்புளோஷன் 46-50 — பிகரடேரா—11
10. ராக்கெட் 46-50 — நாதுசிங்—3
11. டிப்ளமாட் 46-50 — கதம்—12
12. சுப்ரீம் 46-50 — கீர்த்திசந்த்—4

டிப்ஸ்:
1. டோண்டோ
2. அமந்தா

எதிர்பாராத வெற்றி; லக்கி பார்பரா

**6. சிட்டகாங் பிளேட்**
1400 மீட்டர் 5-35 மணி

1. பேடாக் பிரைட் 60-00 — மகமது—1
2. லவ்லெட்டர் 59-00 — தேவதாஸ்—5
3. ராயல் ஷூட் 57-50 — எஸ். மார்ஷல்—2
4. ஸ்மோக்கி 55-00 — எல். மார்ஷல்—4
5. பிஞச்சியோ 49-00 — ஆஜாத்—6
5. ஈவன்டைம் 49-00 — கீர்த்தி சந்த்—3

டிப்ஸ்:
1. ஈவன்டைம்
2. பேடாக் பிரைட்

எதிர்பாரத வெற்றி: லவ் லெட்டர்

**ஜாக்பாட்:** 2, 3, 4, 5, 6-வது பந்தயங் கள்.

**டிரெபிள்:** 4, 5, 6-வது பந்தயங்கள்.

**டபுள்:** 5, 6-வது பந்தயங்கள்.

**தனலா:** 3-வது பந்தயம்.

**எக்சாக்டா:** 5-வது பந்தயம்.

# ரேஸ் செய்தி

# ஞாயிற்றுக்கிழமை ரேசுக்கு டிப்ஸ்

**சென்னை, மார்ச் 9—நாளை கிண்டியில் பர்லக்கி மிடி கப் பந்தயத்தில் ரம்மி அண்ட் ஷோ வெற்றி பெறத் துடிக்கிறது.**

கீழ் வகுப்பில் எளிதில் வெற்றி பெற்ற இக் குதிரை இப் பந்தயத்தில் வெற்றி பெறுவதற்கு சிறந்த வாய்ப் புள்ளது.

நாளைய ரேசில் நடை பெறும் பந்தயங்களில் பங்கு கொள்ளும் குதிரைகள், ஜாக்கிகளின் பெயர்கள், டிராநம்பர், டிப்ஸ் ஆகியவை கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**அசுவகோஷ் டிப்ஸ்**
1. டிங் எ லிங்
2. ரம்மி அண்ட் ஷோ
3. பைன்வாலி
4. ஆட்டம் கோல்ட்
5. அமந்தா
6. பேடாக் பிரைட்

**நிச்சய வெற்றி ரம்மி அண்ட் ஷோ**

**1. குதாப் பிளேட்**
1200 மீட்டர் 2-30 மணி

1. தால்கிங் 54-00 — உமேஷ்—5
2. டாக்டர் ஜிவாகோ 54-00 — பெரிஸ்—9
3. நைட்கேப் 54-00 — கீர்த்தி சந்த்—1
4. டிங்எலிங் 5400 — ரெட்டி—3
5. கேனனேர் 54 00 — மகமதுகான்—6
6. ராஜ்வன்ஷ் 54 00 — ரகுமான்—8
7. டியர்எடித் 52 50 — எல். மார்ஷல்—2
8. போனிடெய்ல் 52 50 — கதம்—4
9. அலை ஓசை 52 50 — மக்பூல்கான்—7

டிப்ஸ்:
1. அலை ஓசை
2. டிங்எலிங்

எதிர்பாராத வெற்றி நைட் கேப்

**2. பர்லக்கிமிடி கப்**
2000 மீட்டர் 3-10 மணி

1. பைவ் ஸ்டார் 60-00 — ரெட்டி—4
2. பி[illegible] ஆப் கங்கா 59-00 — [illegible]சே—3
3. லிட்டில் எக்ஸ்பிரஸ் 52-00 — கரன் சிங்—1
4. ரம்மி அண்ட் ஷோ 45-50 — எல். மார்ஷல்—2

டிப்ஸ்:
1. ரம்மி அண்ட் ஷோ
2. லிட்டில் எக்ஸ்பிரஸ்

**3. காஞ்சி பிளேட்**
1200 மீட்டர் 3-45 மணி

1. வெனீஷியா 60-00 — பிரிசன்—2
2. சாடூன் 57-00 — ரகுமான்—11
3. ரோமன் ஆர்டர் 57-00 — ரெட்டி—14
4. குவீன்ஸ் பிளஷர் 56-00 — தேவதாஸ்—3
5. மக்கியவல்லி 55-50 — உமேஷ்—1
6. பினிஷிங் பவர் 54-00 — மகமதுகான்—12
7. ஷைன் வெல் 53-50 — கீர்த்திசந்த்—10
8. ரோமன்கேம்ப் 50-50 — நாதுசிங்—5
9. காட்ஸ் வில் 50-00 — எல். மார்ஷல்—13
10. பிரைட்னஸ் 50-00 — ஆஜாத்—
11. ஏகின்கோர்ட் 49-50 — பிகரடோ—15
12. பைன்வாலி 49-50 — என். அகமது—9
13. ராயல் ஜஸ்டிஸ் 49-00 — டிக்சன்—4
14. பிங்க் டயமண்ட் 48-50 — மகமது அகமது—6
15. பிரின்சஸ் ஜெயம் 47-00 — கதம்—8

டிப்ஸ்:
1. பிங்க் டயமண்ட்
2. ரோமன் கேம்ப்

எதிர்பாராத வெற்றி: பைன்வாலி

**4. மார்னிங்டன் பிளேட்**
1200 மீட்டர் 4.25 மணி

1. ஆட்டம் கோல்ட் 60-00 — பெரிஸ்—1
2. டர்புலன்ஸ் 55-00 — மகமதுஅகமது—2
3. லீலாமகால் 55-00 — கரன்சிங்—5
4. பிரின்ஸ்லி 54-00 — என். அகமது—6
5. கிங் ஆர்தர் 48-00 — ஜி. கான்—3
6. மார்கோட் பாண்டின் 47-00 — டிக்சன்—4

டிப்ஸ்:
1. கிங்ஆர்தர்
2. ஆட்டம் கோல்ட்

**5. வேலூர் பிளேட்**
1000 மீட்டர் 5-மணி

1. பென்ஹாக் 60 00 — ஜி. கான்—1
2. ரியல்பிரண்ட் 60 00 — கலந்தர்—5
3. லக்கிபார்பரா 58 50 — மகமது அகமது—6
4. பின்துக்ளக் 58 50 — உமேஷ்—2
5. அமந்தா 57 50 — என். அகமது—8
6. டோண்டோ 5[illegible]-50 — தேவதாஸ்—9

4-ம் பத்தி பார்க்க

# விவசாயிகள் பிரச்னை: புரட்சி மூளும்; வ. கம்யூ. எச்சரிக்கை

**சென்னை, மார்ச் 9— விவசாயிகளுக்கு குறைந்த கூலிதான் கொடுக்கப்பட்டுவருகிறது. இதனால் புரட்சி மூளும் என்று வ. கம்யூ. உறுப்பினர் வடிவேலு கூறினார்.**

சட்டசபையில் தமிழக அரசு பட்ஜெட் மீது நடந்த விவாதத்தில் கலந்துகொண்டு அவர் பேசியதாவது:—

அரசாங்க திட்டங்களை எல் லாம் எதிர்க்கிறார்களே என்று ஆளுங்கட்சியினர் குறை கூறு கின்றனர். ஆனால்இந்தத் திட் டங்களெல்லாம் மக்களுக்குப் போய் சேருகிறதா என்று இதய பரிசோதனை செய்கிறீர் களா? செய்த நன்மைகளை எல்லாம் நன்றி மறக்கும் மக்கள் அல்லர் தமிழ்நாட்டு மக்கள். விவசாயிகளுக்கு குறைந்த கூலி கொடுக்கப் பட்டு வருகிறது. இதனால் புரட்சிதான் மூளும். இதனை அணைபோட்டு தடுக்க முடி யாது.

ராஜகோபால் (தி.மு.க.): ஹாண்டே போன்றவர்கள் சந்தர்ப்பவாதமாக வேறு கட்சியில் சேர்ந்து, எங்களைப் பார்த்து ஆள என்ன தகுதி என்று கேட்கிறார்கள். இன்றையதினம் கவர்ச்சியில் சிக்கிக்கொண்டிருக் கிறார்கள். இதிலிருந்து விரைவில் விடு படத்தான் போகிறார்கள்.

இவ்வாறு வடிவேலு பேசி னார்.

## புதுவையில் அ. தி. மு. க. வரி போடுமா?

ஜே.எஸ் ராஜு (தி.மு.க): இந்தப் பட்ஜெட்டை ஏன் எதிர்க்கிறார்கள் என்பது புரிய வில்லை. தி.மு.க. வை விநோத மான முறையில் விமர்சிக் கிறார்கள். ஆனால் இது ஒரு சோசலிச பட்ஜெட் என் பதை மக்கள் உணர்ந்திருக் கிறார்கள்.

இந்த நிதிநிலை அறிக்கை யில் அண்ணாவின் கொள்கை கள்தான் பிரதிபலிக்கின்றன.

வரியில்லாமல் எந்தக்கட்சி யும் ஆட்சி செய்ய முடியாது அண்ணாகூட வசதிமிக்கவர் களுக்கு வரிபோடலாமென்று கூறியிருக்கிறார்.

ஒருவேளை, புதுவையில் அவர்கள் வரி போடாமல் ஆட்சி செய்கிறார்களா என் பதைப் பார்ப்போம்.

1967-வரை உணவுக்குப் பற்றுக்குறையாக இருந்த தமிழ்நாடு, இப்போது மற்ற மாநிலங்களுக்கு எல்லாம் உணவு ஏற்றுமதி செய்துவரு கிறது.

அண்ணாவின் பசுமைப் புரட் சியே இதற்குக் காரணம்.

இவ்வாறு ஜே. எஸ். ராஜு பேசினார்.

## சோஷலிச பட்ஜெட்

கந்தசாமி (பா. பிளாக்) பேசியதாவது:— சோஷலிச லட்சியத்தை அடையும் வகையில் இந்த பட்ஜெட் இருக்கிறது. அரசு ஊழியர் இறந்தால் அவர்கள் குடும்பத்திற்கு 10 ஆயிரம் ரூபாய் தருவது சிறப்பான திட்டம்.

அண்மையில் என் தொகுதி யில் ஒரு டெபுடி தாசில்தார் இறந்துவிட்டார். அவர் குடும்பத்திற்கு 10 ஆயிரம் ரூபாய் அளிக்கப்பட்டிருக்கி றது.

கரும்பின் விலையை டன் 160 ரூபாய் என்று உயர்த்தவேண் டும். என் தொகுதியில் (உசி லம்பட்டி) ஒன்றேமுக்கால் கோடியில் ஒரு பஞ்சாலை நிறு வப்படும் என்று முதல்வரும்? தொழிலமைச்சரும் அறிவித் திருந்தார்கள். அதுமந்த நிலை யிலேயே இருக்கிறது.

இவ்வாறு கந்தசாமி பேசி னார்.

# கவர்ச்சியை நோக்கி...

சென்னை, மார்ச் 9—சட்ட சபையில் வடிவேலு (வலது கம்யூனிஸ்டு) பேசிக்கொண்டி ருந்தபோது பல உறுப்பினர் கள்குறுக்கிட்டுஅரசுக்கு ஆதர வாக கருத்து கூறினர்.

இதுபற்றி வடிவேலு குறிப் பிட்டு "இப்போது துதிபாடிக் கொண்டிருப்பவர்கள் 1976 தேர்தல் வருவதற்குள்ளாக ஓட்டுவாங்கஇங்கே செல்வார் கள்" என்றுபின்னால்கையைக் காட்டிக் கூறினார்

முதல்வர் கருணாநிதி:— (குறுக்கிட்டு) இங்கே செல் வார்கள் என்று காண்பித்த உறுப்பினர் வடிவேலு எங்கே என்று விளக்குவாரா?

வடிவேலு : கவர்ச்சி என்று சொல்கிறார்களே அங்கேதான்.

முதல்வர்: சரிதான் இப் போதுதான் புரிகிறது; நீங் கள் ஏன் அங்கே சென்றீர்கள் என்று.

முன்னதாக வடிவேலு பேசு கையில் "ஜனங்கள் நன்றி மறப்பவர்கள் அல்ல. அவர் கள் கண்குத்திப் பாம்புபோல பார்த்துக் கொண்டிருக்கிறார் கள்" என்றார்.

முதல்வர்:— திருத்துறைப் பூண்டி வட்ட பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதையும் மக்கள் அப்படிப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

வடிவேலு:—யார் செய்தா லும் தவறுதான்.

# ரூ. 35 லட்சத்துக்கு குரங்கு ஏற்றுமதி

புதுடெல்லி, மார்ச் 9— இந்தியாவில் இருந்து குரங்கு, ஆடு, நாய், பூனை, ஆமை, கோழி ஆகியவை அதிக அளவில் ஏற்றுமதிசெய் யப்படுகின்றன. கடந்த ஆண்டு ரூ. 1கோடியே 34லட்சம்மதிப் புள்ள பிராணிகள் ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளன. இதில் குரங்கு மட்டும் ரூ. 35 லட் சத்து 20 ஆயிரத்துக்கு ஏற்று மதி செய்யப்பட்டுள்ளது. ரூ. 28 லட்சம் மதிப்புள்ள பறவைகளை இந்தியாவி லிருந்து ஜப்பான் வாங்கி உள்ளது.

# அ. தி. மு. க. - காங்கிரஸ் ஆதரிக்கவேண்டிய பட்ஜெட்: சுப்பு பேச்சு

**சென்னை, மார்ச் 9—தமிழக அரசு வெளியிட்டுள்ள 1974—75-ம் ஆண்டு வரவு செலவு திட்டம், அ. தி. மு. க.வும், காங்கிரசும் ஆதரிக்க வேண்டிய பட்ஜெட் என்று தி. மு. கழக எம். எல். ஏ. சுப்பு கூறினர்.**

**"அண்ணுவின் இலட்சியங்களும், காந்தியின் கொள்கைகளும் இந்த பட்ஜெட்டில் இடம் பெற்றுள்ளன" என்றும் சுப்பு கூறினர்.**

பட்ஜெட் உரையின் மீது சுப்பு பேசியதாவது:

எதிர் காலத்தில் மாநில சுயாட்சி வேண்டும் என்று சொல்வது வெறும் முழக்கத்தோடு நின்றுவிடவில்லை. நடைமுறையிலே இருக்கிற இடையூறுகளை ஆதாரத்தோடு வகுத்துக் கூறுகின்ற வகையிலேதான் இந்த வரவு செலவுத் திட்டம் அமைந்திருக்கிறது. அதைப் பற்றி கம்யூனிஸ்டு தலைவர்கள் என்ன சொல்கிருர்கள்? இதை அவர்கள் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். அந்த வகையில் இந்த வரவு செலவு திட்டம் அமையவில்லையா?

## யாரும் முதல்வராகலாம்

14 பேர்களா[ய்] இருந்தவர்கள் இன்றைக்கு முதல்அமைச்சராக ஆக முடிந்திருக்கிறது. ஆகவே முதல் அமைச்சராக யார் வேண்டுமானுலும் வரலாம். ஆனல், இன்றைக்கு நாம் எண்ணிப் பார்க்கவேண்டியது ஜனநாயகத்தைக் காப்பாற்றவேண்டும். இந்த மாநிலத்தின் பிரச்னைகளை சீர்தூக்கிப் பார்க்கவேண்டும். இதற்குரிய வகையிலாவது நாம் ஒற்றுமையாக இருக்க வேண்டாமா?

நிதி நிலை அறிக்கையை அந்தக் கோணத்தில் தான் பார்க்கவேண்டும்.

ஏதோ முதல் அமைச்சர் மீதுள்ள காழ்ப்புணர்ச்சியை வைத்துக்கொண்டு, அதன் அடிப்படையில் விமரிசனம் செய்யக்கூடாது. பொருளாதார கோணத்தில் பொறுப்போடு பார்ப்பதற்குத் தவறிவிடக்கூடாது.

## நாவின் நடனங்கள்

அண்ணு என்ன சொன்னுர் என்பது இந்த நிதிநிலை அறிக்கையிலே சொல்லப்பட்டிருக்கிறது. சமதர்மம் பேசும் தோழர்களுக்குச் சொல்லிக் கொள்கிறேன்—சமதர்ம திட்டங்கள் நாவின் நடனங்களாக இல்லாமல் நடைமுறை வடிவங்கள் பெற்று விளங்க வேண்டும் என்பதற்கு இந்த அரசு தன்னை ஒப்படைத்துக் கொண்டிருக்கிறது.

—அண்ணு வழியில் கம்யூனிஸ்ட் கட்சி எடுத்துவைத்த கோரிக்கைகளெல்லாம் இங்கே நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. கோபால் இங்கே சிறையில் உள்ள வசதிக் குறைவைப் பற்றி சொன்னுர்கள். என்னை பொறுத்தவரையில் சிறையிலுள்ள வசதிக் குறைவைப் பற்றிக் கவலைப்படவில்லை. ஆனல் எதற்காக நாம் சிறைக்கு சென்றோமோ அந்தக் கோரிக்கைகள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றனவா என்று பார்த்தால் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. அதில் தான் நான் அதிகம் அக்கறைகாட்ட விரும்புகிறேன். நான் தி.மு. க.வில் சேர்ந்ததற்காகச் சொல்லவில்லை. என்ன காரணத்திற்காக, நாம் போராட்டத்தை நடத்தினேமோ, அதை எண்ணிப்பார்க்கவேண்டாமா? விவசாயிகளுக்கு மின்சாரக் கட்டணம் குறைக்கப்படவேண்டும் என்பது போராட்டத்தின் ஒரு கோரிக்கை.

## மின்சாரமும் விலையும்

இந்த வரவு செலவுத் திட்டக் குறிப்பிலே மின்சாரக் கட்டணத்தைப் பொறுத்தவரையில் நமக்கு இருக்கக் கூடிய நிலைமையை எடுத்துச் சொல்லி, நமக்கு 39 லட்சம் யூனிட்டுகள் பற்றாக்குறை இருக்கிறது என்பதை எடுத்துக்காட்டி, அதை ஈடுகட்ட கேரளா போன்ற அண்டை மாநிலங்களிலிருந்து நாம் மின்சாரத்தை, அதிக விலைக்கு பெற்று, அந்த மின்சாரத்தையும் நாம் உற்பத்தி செய்யும் மின்சாரத்தையும் உயர் அழுத்த மின்சாரத்திலிருந்து குறைந்த அழுத்த மின்சாரமாக மாற்றிப் பயன்படுத்தும் கிராமப் பகுதிக்குக் கொண்டு செல்லும் பொழுது 20 பைசாவுக்கு மேலாக அடக்கிச் செலவாகிறது. இந்த நிலையில் மற்ற மாநிலங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது வேளாண்[மைத்] துறைக்கு நாம் யூனிட் ஒன்றுக்கு குறைந்த கட்டணம் தான் வசூலித்து வருகிறேம்.

## யாருக்கு வரி

மின்சார வாரியம் விவசாயிகளுக்குக் குறைந்த விலையில் மின்சாரம் கொடுப்பதால் ஏற்படக்கூடிய இழப்பை ஓரளவுக்கு ஈடுகட்ட வேண்டியிருக்கிறது. அதற்காக யார் மீது வரி போட முடியுமோ, யார் தாங்கக் கூடியவர்களோ அவர்கள் மீது தான் சர்சார்ஜ் போடப்பட்டிருக்கிறது. சாகு ஜெயினுக்கும், வேங்கடசாமி நாயுடுவுக்கும் விதிவிலக்கு அளிக்கப்படவில்லை. இந்த பட்ஜெட் வரவு செலவுத் திட்டத்தில் வேளாண்மைக்கும், வீட்டிற்கும், வீதிக்கும் இருக்கிற மின்சாரத்திற்கு வரி போடவில்லை. சர்சார்ஜ் இல்லை. அதற்குப் பதிலாக மற்ற துறைகள் அத்தனைக்கும் சர்சார்ஜ் போடப்பட்டிருக்கிறது. அதன் மூலம் ஓரளவுக்கு விவசாயத்திற்குக் கொடுக்கக்கூடிய சலுகையினுல் ஏற்படக்கூடிய இழப்புப் பணத்தை ஈடுகட்ட உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. நாம் வசூலிக்கின்ற கட்டணத்தை மற்ற மாநிலங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் அதிகம் வசூலிக்கப்படவில்லை. இருந்தாலும் விவசாயிகளுக்கு சலுகை காட்டவேண்டும் என்ற காரணத்தினுல் இந்த அரசு அவர்களுக்கு இந்த விதிவிலக்கு அளித்திருக்கிறது. வேளாண்மைத்துறை, வீதி விளக்குகள், வீட்டு விளக்குகள் இவைகளை விட்டுவிட்டு, மற்ற துறைகளுக்கு சர்சார்ஜ் விதிக்கப்பட்டிருக்கிறது. அதைக்கூட நீங்கள் ஏற்றுக்கொள்ளவில்லையா?

## கேரளம் உதாரணமா?

அனந்தநாயகி: ஆன் ஏ பாயின்ட் ஆப் ஆர்டர். நம்ம மாநிலங்களைவிட நம்முடைய மாநிலத்தில், அதிகமாக வசூலிக்கப்பட வில்லை [...] சொன்னுர்கள். கேரள மாநிலத்தில், குறைவாக வசூலிக்கப்படுகிறது, அவர்களுக்குத் தெரியுமா?

சுபு: கேரளாவில் எவ்வளவு பம்பு செட்டு இருக்கிறது? அங்கே விவசாய நிலைமை என்ன என்பது உங்களுக்குத் தெரியும். அங்கே விவசாயம் எப்படி நடந்துவருகிறது என்பதையும் பார்க்க வேண்டும். ஆற்றுத்தண்ணீர் அதிகமாக இருக்கிறது. அங்கே விவசாய பம்பு செட்டுகள் எவ்வளவு இருக்கின்றன என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

சர்க்கரைத் தொழிலைப் பொறுத்தவரையில் எத்தனையோ மாநிலங்களில் நா[...] டுடமை செய்திருக்கவேண்டும் என்பதைக்கேற்ப அதைக்குலைக்கின்ற ஒடுக்குகின்ற நடவடிக்கையாக மத்தியசர்க்காராக இவ்வாறு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. இந்த நடவடிக்கைகளைக்கூட நீங்கள் ஏற்றுக்கொள்ள முடியாது என்று சொல்லமுடியுமா என்பதைத்தான்நான்பணிவோடு கேட்கிறேன். வரவேற்க வேண்டாமா?

## லட்சம் வீடுகள்

எதிர்க்கட்சி நண்பர்கள் கேரளாவில் ஒரு லட்சம் வீடுகள் கட்டித்தரப்படவில்லையா என்று சுட்டிக்காட்டினுர்கள்.

ஏற்கெனவே வீட்டு வசதி வாரியம் குடிசைமாற்று வாரியம் ஆகிய நிறுவனங்களின் மூலம் வீட்டு வசதிகள் செய்து கொடுக்கப்படுகின்றன. மாநிலத்தின் பல்வேறு பகுதிகளில் குறைந்த செலவிலான 1,417 வீடுகளை அரசு கட்டத் தொடங்கியுள்ளது.

பின் தங்கிய மாநிலங்கள் என்ற காரணத்தைக் காட்டி வேறு சில மாநிலங்களுக்கு தேவைக்கு மேலாகவே நிர்வாகத்தின் தரத்தை உயர்த்துதல் என்ற கணக்கில் நிதி வசதிகளை வாரி வழங்கிய ஆருவது நிதி ஆணைக்குழு, நிதி வசதிகளைத் திரட்டி சிக்கனமாகவும் சீராகவும் வளர்ச்சிப்பணிகளை மேற்கொண்டுள்ள நம்முடைய மாநிலத்திற்கு அளித்த உதவி தொகை குறைவாக இருக்கிறது என்று ரத்தக் கண்ணீரை சிந்தும் அளவில் நிதிநிலை அறிக்கை அந்த குறைபாட்டை எடுத்துக் கூறியிருக்கிறது. நம்முடைய மாநிலத்தின் தேவைகள், எந்த அளவுக்கு நிறைவேற்றப்பட்டிருக்கிறது. மற்ற பிரச்னைகளைத் தீர்த்துவைப்பதற்கு பொருளாதாரமுன்னேற்றம் ஏற்படுவதற்குஎந்தெந்தநடவடிக்கைகளை எடுக்க வேண்டும் என்று ஆக்கபூர்வமாக விமர்சனம் செய்திருந்தால், நிச்சயமாக அதை நான் வரவேற்பேன். அப்படிப்பட்ட விமர்சனம் செய்யப்படவில்லை. அப்படிப்பட்ட யோசனைகளைக் கூறினுல் நாங்கள் ஆதரிப்பதற்கு தயாராக இருக்கிறேம்.

## எல்லா கட்சியும் ஆதரிக்கும்

கம்யூனிஸ்டுகள் கோரிக்கைகள் இதிலே பல நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. ஆகவே, அவர்களும் இதை ஆதரிப்பார்கள்என்றே நினைக்கிறேன் அண்ணு வழி நின்று மாநில சுயாட்சிபெறவேண்டும்என்ற அடிப்படையில் தயார் செய்யப்பட்டிருக்கிற இந்த பட்ஜெட்டை அண்ணு தி. மு. க. தோழர்களும் ஆதரிப்பார்கள் என்றுதான் கருதுகிறேன். காந்தியடிகளின் கொள்கை பழமையானது என்று சுட்டிக்காட்டிய சுரேந்திரனும் இந்த முற்போக்கான வரவுசெலவுத் திட்டத்தை வரவேற்பார் என்று கருதுகிறேன்.

இவ்வாறு சுப்பு எம். எல். ஏ. தனது உரையில் குறிப்பிட்டார்.

## கேட்டரிங் டெக்னலஜி ஆண்டுவிழா

சென்னை, மார்ச் 9—சமையற்கலை—உயர் சத்துணவு தொழில் நுட்பக் கல்லூரி (இன்ஸ்டிடியூட் ஆப் கேட்டரிங் டெக்னலஜி அப்ளைட் நியூட்ரிஷன்)யின் 10-வது ஆண்டு விழா இம்மாதம் 5-ந் தேதியன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழாவிற்குத் தலைமை வகித்த அமைச்சர் நெடுஞ்செழியன், சுற்றுலாத்துறை வளர்ச்சியிலும், அன்னியச் செலாவணியை ஈட்டித் தருவதிலும் ஓட்டல் தொழில் சிறப்பான இடத்தைப் பெற்றிருப்பதாகக் குறிப்பிட்டார்.

தொழிற்கல்வி இயக்குநர் டாக்டர் வி. சி. குழந்தை வேலு பேசுகையில், ஓட்டல் தொழிலில் பயிற்சிபெறும் மாணவர்களுக்கு நல்ல எதிர்காலம் இருப்பதாக தெரிவித்தார். முன்னதாக, மாணவர் தலைவர் கே. ரவி வரவேற்றார். கல்லூரி முதல்வர் எ. வி. குப்புசாமி அறிக்கை வாசித்தார். திருமதி விசாலாட்சி நெடுஞ்செழியன் பரிசுகள் வழங்கினர். மாணவ செயலாளர் எம். வித்யா சாகர் ராவ் நன்றி நவின்றார். பின்னர் அலங்கார அணி வகுப்பு, இன்னிசை உட்பட பல்வேறு கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

## பகவான் ராமகிருஷ்ண தேவர் பிறந்த தினவிழா

ஆம்பூர்(வ.ஆ), மார்ச் 9—பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரது 139 வது பிறந்த தினவிழா(10-ம்தேதிஞாயிறு நாளை காலை நடைபெறும்.

ஆம்பூர் நாகநாதீஸ்வரர் தேவஸ்தானத்தில் மாலை 4-மணிக்கு நிகழ்ச்சியை திருப்பத்தூர் சப் கலெக்டர் ஆர். சண்முகம் துவக்கிவைக்கிருர்.

தமிழ்நாடு பாடநூல் நிறுவன இயக்குநர் எஸ். என். சொக்கலிங்கம் தலைமைவகிக்கிருர். அ. லெ. நடராசன், டாக்டர் ஔவை நடராசன் ஆகியோர் பேசுவார்கள்.

## "எம். ஜி. ஆர். ஆட்சிக்கு வந்தால் என்ன செய்து விடுவார் ?"

# தி. மு. க.-காங்கிரஸ் கடும் வாக்கு வாதம்

சென்னை, மார்ச் 9—நேற்று தமிழக சட்டசபையில் தி மு க உறுப்பினர் எம். ஆர். கண்ணன் பேசும்போது, "எம். ஜி. ஆர். ஆட்சிக்கு வந்தால் என்ன செய்து விடுவார்?" என்று கேட்டார். இதைத் தொடர்ந்து மாநில சுயாட்சி பற்றி அவர் பேச ஆரம்பித்தார். அப்போது புது காங்கிரஸ் உறுப்பினர் அனந்தநாயகி குறுக்கிட்டுப் பேசினர். இருவருக்கும் இடையே கடும் வாக்குவாதம் நடைபெற்றது:—

எம். ஆர். கண்ணன் (தி. மு. க) பேசியதாவது; 20 ஆண்டு காலம் காங்கிரஸ் ஆட்சி நடந்தது மக்கள் பசியால் வாடினுர்கள். அதனுல் தோற்ருர்கள். தி. மு. கழக ஆட்சி அமைந்தது. ஒரு படி அரிசி ஒரு ரூபாய் போடுவோம் என்[ற]ோம். மாநில சுயாட்சி தந்தால் நிச்சயம் அப்படிப் போடுவோம்.

## அனந்தநாய[கி] கேள்வி

அனந்தநாயகி (குறுக்கிட்டு):- மாநில ஆட்சி தடுக்கிறதா? நீங்கள் போடலாம். ஏன்போடவில்லை. ஏன் போட்டதை நிறுத்தினீர்கள்.

எம். ஆர். கண்ணன்:—முன்பு 7 படி 8 படி விற்கவில்லையா? நச்சயம் போட முடியும். அதற்குத்தான் அதிக அதிகாரம் கேட்கிறேம்.

இந்த அரசின் கொள்கைகள் நல்ல கொள்கைகள். அதை அமல் நடத்தும் அதிகாரிகள் நிர்வாக திறமைக் கோளாருல் சிறிது பாதிப்பு இருந்து இருக்கலாம்.

கண் ஒளி திட்டம், கைரிக்ஷாவை ஒழித்து சைக்கிள் ரிக்ஷா கொடுத்ததை பாராட்டக் கூடாதா?

பணக்காரர்கள் பிரமாணர்கள், பஸ் முதலாளிகள் தான் இந்த திட்டத்தை எதிர்க்கிருர்கள்;

எம். ஜி. [ஆர்.] ஆட்சி வந்தால் என்ன செய்துவிடுவார். இதைவிட நல்லஆட்சி தாழ்த்தப்பட்டவர்களுக்கு நன்மை செய்யும் ஆட்சி இருக்காது.

ஆண்டி அம்பலம் (ப. காங்)::

சென்னை மாநகராட்சியில் வகுப்பு வாரி முறையில் மேயர் தேர்ந்து எடுக்கப்படுவது போல மதுரையிலும் வகை செய்யப்பட வேண்டும்.

இவ்வாறு எம். ஆர். கண்ணன் பேசினர்.

# கேரளத்திலிருந்து தமிழகத்திற்கு வரும்நோய்

சென்னை, மார்ச் 9—தமிழக சட்டமன்றத்தில் கேள்வி நேரத்தின்போது, தென்னை மரத்துக்கு நோய் பரவுவது பற்றி கேள்வி எழுந்தது.

தி.மு.க. உறுப்பினர் வீராசாமி தெங்காய் உற்பத்தியில் கேரளம்தான் போட்டியாக இருந்துவருகிறது. ஆகையால் அவர்கள்தான் இந்த நோயை பரவவிட காரணமாக இருக்கிருர்கள் என்று கூறப்படுகிறதே. இது அரசுக்கு தெரியுமா என்று கேட்டார்.

வேளாண்மைத் துறை [அ]மைச்சர் ஆதித்தனர் பதிலளிக்கையில் இது பற்றிய ஆதாரங்கள் அரசிடம் இல்லை என்று கூறினர்.

# சினிமா கொட்டகைகளை தேசியமயமாக்காதது ஏன்? காங்கிரஸ்எம்.எல்.ஏ.கேள்வி

**சென்னை, மார்ச் 9— சினிமா கொட்டகைகளை தேசியமயம் ஆக்காதது ஏன்? குதிரைப் பந்தயத்தை ஒழிக்காதது ஏன்? என்று புது காங்கிரஸ் எம். எல். ஏ. குமாரசாமி கேட்டார்.**

**"வரியையும் போட்டு, வரிச்சலுகையும் காட்டியது ஏன்?" என்று பழைய காங்கிரஸ் எம். எல். ஏ. டென்னிஸ் கேட்டார்.**

நேற்று தமிழக சட்டசபையில் பட்ஜெட் மீதான பொது விவாதத்தில் கலந்துகொண்டு பேசிய உறுப்பினர்களும், அவர்கள் பேச்சும் வருமாறு:-

குமாரசாமி (புது காங்கிரஸ்) பேசியதாவது:—

மத்திய அரசு, உள்ள நிதிகளை எல்லா மாநிலங்களுக்கும் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்கிறது. ஆனல், ஆளுங்கட்சியினர் மத்திய அரசு ஏதும் செய்யவில்லை என்று கூறுகிருர்கள். நெய்வேலியும், சேலம் இரும்பு ஆலையும் மத்திய அரசு தரவில்லையா? மற்ற மாநிலங்களுக்கு அரிசி கொடுத்தோம் என்று கூறுகிருர்கள்.

மற்ற மாநிலங்களிடமிருந்து மின்சாரமும், நிலக்கரியும் நாம் பெறவில்லையா? விவசாயிகளுக்கு இலவசமாக கிணறு வெட்ட நிதி கொடுக்கக் கூடாதா? உணவு விலையைக் கட்டுப்படுத்த மத்திய அரசு ஏன்?

சினிமா கொட்டகைகளை தேசியமயம் ஆக்குவோம் என்றீர்கள். ஆக்கினீர்களா? குதிரை பந்தயத்தை ஒழிப்போம் என்றீர்கள். ஒழித்தீர்களா?

மத்திய அரசு மீது குறை கூறி வந்தாலே நம் தேவை பூர்த்தி ஆகாது.

நமக்குத் தேவையான உரத்தை நாம் உற்பத்தி செய்ய முற்படலாம்.

## ஆதித்தனர் பதில்

அமைச்சர் ஆதித்தனர் (குறுக்கிட்டு):—

தமிழ்நாட்டில் 7 லட்சத்து 20 ஆயிரம் டன் யூரியாவும், 6 லட்சத்து 30 ஆயிரம் டன் அமோனியாவும் தயாராகிறது. இதில் நமக்கு ஒரு லட்சம் டன்தான் தருகிருர்கள். பாக்கியை மற்ற மாநிலங்களுக்கு அனுப்புகிருர்கள். இது பற்றி உறுப்பினர் கவலைப்பட்டது உண்டா?

நம் மாநிலத்தில் உற்பத்தியையாவது விநியோகிக்க அதிகாரத்தைமுதல்வர்கேட்டு இருக்கிருர்.

குமாரசாமி:—நமக்கு நிலக்கரி பற்றாக்குறைஎன்றுகேட்டபோது மற்ற மாநிலத்தில் இருந்து அனுப்பவில்லையா? இந்த பட்ஜெட் மக்களின் நம்பிக்கைக்குரிய பட்ஜெட் இல்லை.

இவ்வாறு குமாரசாமி பேசினுர்.

## அரிஜன நீதிபதி: தி.மு.க. பெருமை

ஜெபமாலை (தி. மு. க.) பேசியதாவது:—

நல்ல நிதிநிலை அறிக்கையை மனதார வரவேற்கிறேன். தமிழக அரசின் சாதனைகளையும். முதல்வரின் [நிதிநி]லை அறிக்கையையும் புக[ழ்]ந்து இருக்கிருர்கள்.

ஆனல் இங்கே எதிர்க்கட்சியினர் பற்றாக்குறை பட்ஜெட் என்று குறை சொல்லி வருகிருர்கள்.

ஏழைகளுக்கு பல வச[தி]களை முதல்வர் செய்து வருகிருர். கிராமங்கள் முழுவதும் மின் ஒளிதரப்பட்டு உள்ளது. மனச்சங்கடம் காரணமாக இதை வரவேற்க மறுக்கிருர்கள்.

அரிஜனங்களுக்கு வீட்டு வசதி வாரியம் அமைக்கப்பட்டு இருக்கிறது. இதற்கு முன்பு இருந்தவர்கள் இப்படி நல்ல காரியம் செய்யவில்லை, செய்ய மறுத்தார்கள்.

அரிஜன சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவரை உயர் நீதி மன்ற நீதிபதியாக ஆக்கிய பெருமை முதல்வருக்கு உண்டு.

இவ்வாறு ஜெபமாலை பேசினுர்.

பழைய காங்கிரஸ் உறுப்பினர் டென்னிஸ் பேசியதா[வ]து:—

பற்றுக்குறைபட்ஜெட்டால் வரி உயரும், விலை வாசிகள் ஏறும். பொருளாதார உயர்வுக்கான எந்தவிதமான பரிகாரமும் இதில் இல்லை. பொருளாதாரப் புரட்சிக்குத் திட்டமும் இல்லை. மத்திய அரசு மீது பழி போட்டிருக்கிருர்கள்.

ஆளுங்கட்சிஉறுப்பினர்கள், அமைச்சர்கள் தொகுதிகளுக்கு அதிகம் செலவிடப்படுகிறது.

வரிச் சீரமைப்பு என்ற போர்வையில் 10 கோடி ரூபாய்க்கு வரிச் சுமையைச் சுமத்தி யிருக்கிருர்கள். விற்பனை வரி உயர்வு மூலம் அத்தியாவசியப் பண்டங்களின் விலை உயரும். வரியையும் போட்டு, வரிச் சலுகை தந்தேன் என்பது வலது கையால் கொடுத்து இடது கையால் பறிப்பது போலாகும். உணவு உற்பத்தி பெருகியிருந்தும் சில இடங்களில் அரிசி படி 5 ரூபாய் விற்பதேன். வைத்தியம் சம்பந்தப்பட்ட அரிஷ்டங்களுக்கு வரிவிலக்கு கொடுக்க வேண்டும்.

சிக்கனம் கையாளப்பட்டிருந்தால் வரி போடுவதைத் தவிர்த்திருக்கலாம்.

இவ்வாறு டென்னிஸ் பேசினுர்.

## மத்திய அரசு வரி விதி[ப்]பால்

# பரிசுச்சீட்டு விற்பனை குறைந்துவிட்டது: கருணநிதி தகவல்

**சென்னை, மார்ச் 9—"மத்திய அரசின் வரி விதிப்பால் பரிசுச்சீட்டு விற்பனை குறைந்துவிட்டது" என்று சட்டசபையில் முதலமைச்சர் கருணநிதி தெரிவித்தார்.**

இது பற்றி, தமிழக சட்டசபையில் உறுப்பினர்கள் கேட்ட கேள்விகளும் அவற்றுக்கு முதல்வர் கருணநிதி அளித்த பதில்களும் வருமாறு :—

சௌந்தர பாண்டியன்:—(அதிமுக) பரிசுச் சீட்டு வருமானம் குறைந்துள்ளதா?

கருணநிதி;— பரிசுச் சீட்டு விற்பனை வசூல் குறைவாக இருப்பதால் பரிசுச் சீட்டு இலாகாவையும் — சிறு சேமிப்பு இலாகாவையும் இணைக்க முடிவு செய்திருக்கிறது.

பாலசுந்தரம்: மாவட்ட தலைநகர்களில் பரிசுச்சீட்டு குலுக்கப்படுமா?

கருணநிதி: எங்கு குலுக்கினுலும் அதிர்ஷ்டம் ஒன்ருகத்தான் இருக்கும். இது குறித்து அரசு எந்த முடிவும் எடுக்கவில்லை.

ராமசாமி:— (தி. மு. க) பரிசுச் சீட்டுமூலம் மொத்தம் இதுவரை வருமானம் எவ்வளவு? எந்தெந்த வகையில் செலவு செய்யப்படுகிறது?

## பிச்சைக்காரர் விடுதிகளுக்கு

பதில்: 1968 முதல் மொத்த வருமானம் ரூ. 34 கோடி. நிகர வருமானம் 18 கோடி 85 லட்சம் 86 ஆயிரத்து 400 ரூபாய். இதில் 43 லட்சம் ரூபாய் பிச்சைக்காரர் விடுதிக[ளு]க்கு செலவிடப்பட்டிருக்கி[றது].

இளங்கோவன்: [ப]ரிசு சீட்டு வருமானம் குறைந்து கொண்டே வருகிறதே, இத்திட்டம் கைவிடப்படுமா?

பதில்: கைவிடப்படும் உத்தேசம் இல்லை. பரிசு சீட்டு வருமானத்துக்கு மத்திய அரசு வரி போட்டதால் வருமானம் குறைந்து போயிருக்கிறது.

கேள்வி: மதுவிலக்கு ரத்து செய்யப்பட்டுவிட்டதால் பரிசுச் சீட்டு விற்பனை குறைந்ததா?

பதில் : மதுவிலக்கு ரத்து செய்ததால் பரிசுச் சீட்டு விற்பனை குறையாது. ஒருவேளை ஒன்றுக்கு பதிலாக இரண்டு சீட்டுகள் வாங்கக் கூடும். மத்திய அரசு வரி விதிப்பால் விற்பனை குறைந்து போய் இருக்கிறது.

[எ]. வி. எம். அண்ணுமலை (தி. மு. க.):—பரிசுச் சீட்டு விற்பனையை அதிகப்படுத்த திரைப்படம் எடுத்து பிரச்சாரம் செய்யப்படுமா?

பதில்:— 40—50 ஆயிரம் ரூபாய் செலவில் எடுக்க முயற்சி எடுக்கப்பட்டு வருகிறது.

கேள்வி: சட்டசபை உறுப்பினர்கள் யாருக்காவது பரிசு விழுந்திருக்கிறதா?

பதில்: யார் யார் பெயரோ பத்திரிகைகளில் கொட்டை எழுத்தில் வந்துகொண்டிருக்கும்போது, இவர்களின்பெயர் வராமல் போகாது.

## ரூ. 1 கோடி முதியோர் பென்ஷன்

சென்னை, மார்ச் 9—நேற்று சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது, தமிழ்நாட்டில் முதியோர் பென்ஷனுக்கு ரூ. 1 கோடி செலவிடப்படுவதாக முதலமைச்சர் கருணநிதி தெரிவித்தார்.

மனுச் செய்யும் எல்லோருக்கும் உதவி வழங்கப்படுமா என்ற கேள்விக்கு ரூ. 1கோடி மட்[டு]ம் நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டிருப்பதால் இதற்குள்ளேயே செலவை ஒதுக்க வேண்டியிருக்கிறது என்று முதலமைச்சர் பதிலளித்தார். ஆயினும் அங்கவீனர்களுக்கு உதவும் திட்டம் செயல்படுத்தவிருப்பதால், இதன் மூலம் மேலும் பலர் பயனடையலாம் என்றும் கருணநிதி கூறினர்.

# சட்டசபையில் 4 பேர் சேர்ந்து வேறு கதை பேசலாமா?

சென்னை, மார்ச் 9—பழைய காங்கிரஸ் உறுப்பினர் டென்னிஸ் சட்டசபையில் பேசிக் கொண்டிருந்தார்.

அருகில் இருந்த ஆற்காடு வீராசாமி, வேதாசலம் ஆகிய தி. மு. க. உறுப்பினர்கள் பக்கத்தில் அ. தி. மு. க. உறுப்பினர்கள் கோவை செழியனும் துணைசபாநாயகர் சீனிவாசனும் வந்து உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

அப்போது தி.மு.க. உறுப்பினர் ராஜகோபால் எழுந்து, "ஒரு உறுப்பினர் சபையில் பேசிக்கொண்டிருக்கும்போது அவருக்குப் பக்கத்தில் 3, 4 பேர் உட்கார்ந்து கொண்டு சிரித்துப் பேசலாமா? வேறு கதை பேசலாமா?" என்று கூறி ஒரு ஒழுங்குப் பிரச்னையை எழுப்பினர்.

தி. மு. க. உறுப்பினர் வேதாசலம் அதற்குப் பதிலளிக்கும் வகையில் "வேறு கதை பேசுகிருர்கள் என்று அவருக்கு எப்படித் தெரியும்" என்று கேட்டார்.

# தமிழ்நாடு கூட்டுறவு சங்க விதி 85-DD-ன்படி அறிவிப்பு

கீழ்க்கண்ட நிலவள வங்கிகளின் கமிட்டி உறுப்பினர்களை விதிகளின் ஷெட்யூல் V (iv)ன்படி தேர்ந்தெடுக்க அதன் எதிரே குறிப்பிட்டுள்ள மத்திய கூட்டுறவு வங்கிகளின் செயற் குழு உறுப்பினர்களின் கூட்டம் சம்பந்தப்பட்ட மத்திய வங்கிகளின் அலுவலகக் கட்டடத்தில் 17—3—1974 ஞாயிற்றுக்கிழமை காலை 10 மணிக்கு நடைபெறும்.

விவரங்கள் வருமாறு:

| நிலவள வங்கி | மத்திய வங்கி | தேர்தல் அதிகாரி |
|---|---|---|
| வாலாஜா | வேலூர் மத்திய கூட்டுறவு வங்கி, வேலூர் | (ஓ-ம்) கூட்டுறவுச் சங்கங்களின் துணைப்பதிவாளர், வேலூர் |
| செங்கம் | ,, | ,, |
| ஆரணி | ,, | ,, |
| திருத்தணி | காஞ்சிபுரம் மத்திய கூட்டுறவு வங்கி, காஞ்சிபுரம் | (ஓ-ம்) கூட்டுறவுச் சங்கங்களின் துணைப்பதிவாளர், காஞ்சிபுரம் |
| பூந்தமல்லி | ,, | ,, |
| ஆத்தூர் | சேலம் மத்திய கூட்டுறவு வங்கி, சேலம் | (ஓ-ம்) கூட்டுறவுச் சங்கங்களின் துணைப்பதிவாளர், சேலம் |
| கோவில்பட்டி | திருநெல்வேலி மத்திய கூட்டுறவு வங்கி, திருநெல்வேலி | (ஓ-ம்) கூட்டுறவுச் சங்கங்களின் துணைப்பதிவாளர், திருநெல்வேலி |
| கடலூர் | தென்னாற்காடு மத்திய கூட்டுறவு வங்கி, கடலூர் | (ஓ-ம்) கூட்டுறவுச் சங்கங்களின் துணைப்பதிவாளர், கடலூர் |

தேதி: 9—3—1974

# தமிழ்நாடு கூட்டுறவு சங்க விதி 85-DD-ன் படி அறிவிப்பு

கீழ்க்கண்ட நிலவள வங்கிகளின் கமிட்டி உறுப்பினர்களை விதிகளின் ஷெடியூல் V (v) ன்படி தேர்ந்தெடுக்க தமிழ்நாடு கூட்டுறவு மாநில நில வங்கியின் செயற்குழு உறுப்பினர்களின் கூட்டம் 16—3—1974 சனிக்கிழமை பிற்பகல் 3 மணிக்கு தமிழ்நாடு கூட்டுறவு மாநில நிலவள வங்கியின் அலுவலகக் கட்டடத்தில் (32, லஸ் சர்ச் சாலை, மைலாப்பூர், சென்னை-4) நடைபெறும்.

நிலவள வங்கிகளின் பெயர்கள்

1. திருத்தணி
2. கோவில்பட்டி
3. திண்டிவனம்
4. திருவாரூர்
5. குளித்தலை

(ஒப்பம்) மு. கிருட்டினசாமி,
கூட்டுறவுச் சங்க இணைப்பதிவாளர்,
(தேர்தலும் நியமனமும்)
தேர்தல் அதிகாரி,
சென்னை—5.

தேதி: 9—3—1974

# தமிழ்நாடு கூட்டுறவு சங்க விதி 85-FF-ன் படி அறிவிப்பு

கீழ்க்கண்ட கூட்டுறவு நிலவள வங்கிகளின் தலைவர்களையும், துணைத் தலைவர்களையும் அவற்றிற்கு எதிரே குறிப்பிட்டுள்ளபடி தேர்ந்தெடுக்க கமிட்டி உறுப்பினர்களின் கூட்டம் 17—3—1974 ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்கு சம்மந்தப்பட்ட வங்கிகளின் அலுவலகக் கட்டடத்தில் நடைபெறும்.

| நிலவளவங்கியின் பெயர் | தேர்ந்தெடுக்கப்படவேண்டியவர் | தேர்தல் அதிகாரி |
|---|---|---|
| திருத்தணி | தலைவரும், துணைத்தலைவரும் | (ஓ-ம்) ஆர். சுப்பிரமணியம் கூட்டுறவுச் சார்பதிவாளர் திருத்தணி |
| சிதம்பரம் | ,, | (ஓ-ம்) வி. சுப்பிரமணியம் கூட்டுறவுச் சார்பதிவாளர் சிதம்பரம் |
| உசிலம்பட்டி | ,, | (ஓ-ம்) டி. தேவராஜன் கூட்டுறச் சார்பதிவாளர் உசிலம்பட்டி |
| பூந்தமல்லி | தலைவர் | (ஓ-ம்) டி. பி. குலசேகரன் கூட்டுறவுச் சார்பதிவாளர் காஞ்சிபுரம் |
| சேலம் | ,, | (ஓ-ம்) எஸ். இராமசாமி கூட்டுறவுச் சார்பதிவாளர் சேலம் |
| திருவாரூர் | | (ஓ-ம்) எம். கோவிந்தராஜன் கூட்டுறவுச் சார்பதிவாளர் திருவாரூர் |
| கோவில்பட்டி | ,, | (ஓ-ம்) பி. கிருஷ்ணமூர்த்தி கூட்டுறவுச் சார்பதிவாளர் கோவில்பட்டி |
| வாலாஜா | ,, | (ஓ-ம்) கே. சோமசுந்தரம் கூட்டுறவுச் சார்பதிவாளர் ஆற்காடு |
| செங்கம் | ,, | (ஓ-ம்) வி. எஸ். பி. மணி கூட்டுறவுச்சார்பதிவாளர் செங்கம் |
| பழனி | ,, | (ஓ-ம்) சி. நடராஜன் கூட்டுறவுச் சார்பதிவாளர் பழனி |
| கிருஷ்ணகிரி | ,, | (ஓ-ம்) கே. பாலகிருஷ்ணன் கூட்டுறவுச் சார்பதிவாளர் கிருஷ்ணகிரி |
| ஆத்தூர் | துணைத்தலைவர் | (ஓ-ம்) ஆர். ரங்கசாமி கூட்டுறவுச் சார்பதிவாளர் ஆத்தூர் |
| குளித்தலை | ,, | (ஓ-ம்) செசில்ராஜ்குமார் கூட்டுறவுச் சார்பதிவாளர் குளித்தலை |

தேதி: 9—3—1974



# தமிழ்நாடு கூட்டுறவு சங்கங்களின் விதி 85-DDன் படி அறிவிப்பு

கீழ்க்கண்ட கூட்டுறவு நிலவள வங்கிகளின் கமிட்டி உறுப்பினர்கள் பதவிகளுக்கு 17-3-1974 ஞாயிற்றுக்கிழமை சம்பந்தப்பட்ட வங்கியின் அலுவலகக் கட்டடத்தில் நடக்கும் வாக்காளர்கள் கூட்டத்தில் தேர்தல் நடைபெறும்.

விவரங்கள் வருமாறு (விதிகளின் ஷெடியூல் V-ன் படி)

| நிலவளவங்கி | நேரம் | வாக்காளர்தொகுதி | பதவிகளின் எண்ணிக்கை | பதவிக் காலம் | தேர்தல்அதிகாரி |
|---|---|---|---|---|---|
| கோபிச்செட்டி பாளையம் | காலை 9 மணி | இறவைநீர்ப்பாசனக் கூட்டுறவுக் கழகத் தலைவர்கள் | 1 | 30-9-76 | (ஓ-ம்)ஆர். கிருஷ்ணசாமி கூட்டுறவுச் சார்பதிவாளர் கோபிச்செட்டிபாளையம் |
| ,, | காலை 11 மணி | வேளாண்மைபொறியியல் கூட்டுறவுக்கழக கமிட்டி | 1 | 30-9-76 | ,, |
| ,, | காலை 9 மணி | நம்பியூர் | 1 | 30-9-76 | (ஓ-ம்)பி.வி. பரசுராமன் கூட்டுறவுச் சார்பதிவாளர் ஈரோடு |
| ,, | காலை 11 மணி | பெரியகொடிவேரி | 1 | 30-9-76 | ,, ,, |
| கூனூர் | காலை 9 மணி | குபத்தலை | 1 | 30-9-76 | (ஓ-ம்)ஏ. தங்கவேலு கூட்டுறவு விரிவு அலுவலர் கூனூர் |
| கூலூர் | காலை 9 மணி | நீலாம்பூர் | 1 | 30-9-76 | (ஓ-ம்) யு. கிருஷ்ணன் கூட்டுறவுச் சார்பதிவாளர் கூலூர் |
| | காலை 11 மணி | கள்ளபாளையம் | 1 | 30-9-76 | ,, ,, |
| | பகல் 1 மணி | இருகூர் | 1 | 30-9-76 | ,, ,, |
| சேலம் | காலை 9 மணி | இ.நீ.கூ.க.தலைவர்கள் | 1 | 30-9-76 | (ஓ-ம்) எஸ். இராமசாமி கூட்டுறவுச் சார்பதிவாளர் சேலம் |
| | காலை 11 மணி | வே.பொ.கூ.க.கமிட்டி | 1 | 30-9-76 | ,, ,, |
| | காலை 9 மணி | தொகுதி 6 | 1 | 30-9-75 | (ஓ-ம்) கே. ரைதப்பன் கூட்டுறவுச் சார்பதிவாளர் சேலம் |
| ,, | காலை 11 மணி | தொகுதி 7 | 1 | 30-9-76 | ,, |
| ஆத்தூர் | காலை 9 மணி | வே.பொ.கூ.க.கமிட்டி | 1 | 30-9-76 | (ஓ-ம்) ஆர். ரங்கசாமி கூட்டுறவுச் சார்பதிவாளர் ஆத்தூர் |
| ,, | காலை 11 மணி | கொமரபாளையம் | 1 | 30-9-76 | ,, ,, |
| ,, | காலை 9 மணி | தலைவாசல் | 1 | 30-9-76 | (ஓ-ம்) என். ராசரத்தினம் கூட்டுறவு விரிவு அலுவலர் தலைவாசல் |
| ,, | காலை 11 மணி | விரகனூர் | 1 | 30-9 75 | ,, ,, |
| கிருஷ்ணகிரி | காலை 9மணி | இ.நீ.கூ.க.தலைவர்கள் | 1 | 30-9-76 | (ஓ-ம்) கே.பாலகிருஷ்ணன் கூட்டுறவுச் சார்பதிவாளர் கிருஷ்ணகிரி |
| ,, | காலை 11 மணி | வே.பொ.கூ.க.கமிட்டி | 1 | 30-9-76 | ,, ,, |
| ,, | பகல் 1 மணி | கிருஷ்ணகிரி | 1 | 30-9-76 | ,, ,, |
| திண்டிவனம் | காலை 9மணி | வே.பொ.கூ.க.கமிட்டி | 1 | 30-9-76 | (ஓ-ம்)கே. சொக்கலிங்கம் கூட்டுறவு சார்பதிவாளர் திண்டிவனம் |
| ,, | காலை 11மணி | ஆவணிப்பூர் | 1 | 30-9-76 | ,, ,, |
| ,, | காலை 9மணி | சாரம் | 1 | 30-9-76 | (ஓ-ம்) டி.ராசாக்கண்ணு கூட்டுறவு விரிவு அலுவலர் வானூர் |
| ,, | காலை 11 மணி | திண்டிவனம் | 1 | 30-9-76 | ,, ,, |
| கடலூர் | காலை 9மணி | இ.நீ.கூ.க. தலைவர்கள் | 1 | 30-9-76 | (ஓ-ம்)என்.வி.கிருஷ்ணசாமி கூட்டுறவுச் சார்பதிவாளர் கடலூர் |
| ,, | காலை 11மணி | மஞ்சகுப்பம் | 1 | 30-9-76 | ,, ,, |
| | காலை 9மணி | கடலூர் (O.T) | 1 | 30-9-76 | (ஓ-ம்)பி.சற்குணநாதன் கூட்டுறவுச் சார்பதிவாளர் கடலூர் |
| ,, | காலை 11மணி | குறிஞ்சிப்பாடி | 1 | 30-9-74 | ,, ,, |
| ,, | பகல் 1மணி | நெல்லிக்குப்பம் | 1 | 30-9-74 | ,, ,, |
| சிதம்பரம் | காலை 9மணி | இ.நீ.கூ.க.தலைவர்கள் | 1 | 30-9-76 | (ஓ-ம்)வி. சுப்பிரமணியம் கூட்டுறவுச் சார்பதிவாளர் சிதம்பரம் |
| | காலை 11மணி | வே.பொ.கூ.க.கமிட்டி | 1 | 30-9-76 | ,, ,, |
| | பகல் 1மணி | தொகுதி 5 | 1 | 30-9-[illegible] | ,, ,, |
| திருவாரூர் | காலை 9மணி | இ.நீ.கூ.க.தலைவர்கள் | 1 | 30-9-76 | (ஓ-ம்) எம்.கோவிந்தராஜன் கூட்டுறவுச் சார்பதிவாளர் திருவாரூர் |
| | காலை 11 மணி | தொகுதி 2 | 1 | 30-9-76 | ,, ,, |
| | காலை 9மணி | தொகுதி 4 | 1 | 30-9-76 | (ஓ-ம்)ஏ.வைத்தியநாதன் கூட்டுறவு விரிவு அலுவலர் திருவாரூர் |
| | காலை 11மணி | தொகுதி 6 | 1 | 30-9-76 | ,, ,, |
| குளித்தலை | காலை 9மணி | இ.நீ.கூ.க. தலைவர்கள் | 1 | 30-9-76 | (ஓ-ம்) பி. வீரப்பன் கூட்டுறவுச் சார்பதிவாளர் குளித்தலை |
| | காலை 11மணி | கட்டளை மேற்கு | 1 | 30-9-76 | ,, ,, |
| | பகல் 1மணி | தோகமலை வடக்கு | 1 | 30-9-76 | ,, ,, |
| | காலை 9மணி | கடவூர் | 1 | 30-9-76 | (ஓ-ம்) செசில்ராஜகுமார் கூட்டுறவுச் சார்பதிவாளர் குளித்தலை |
| | காலை 11மணி | தோகமலை தெற்கு | 1 | 30-9-75 | ,, ,, |
| கரூர் | காலை 9மணி | இ.நீ.கூ.க. தலைவர்கள் | 1 | 30-9-76 | (ஓ-ம்) ஆர். நாகராசன் கூட்டுறவுச் சார்பதிவாளர் கரூர் |
| ,, | காலை 11மணி | வே.பொ.கூ.க.கமிட்டி | 1 | 30-9-76 | ,, ,, |
| ,, | பகல் 1மணி | கரூர் வடக்கு | 1 | 30-9-76 | ,, ,, |
| ,, | காலை 9மணி | வெள்ளியணை | 1 | 30-9-76 | (ஓ-ம்)எம். கோவிந்தராசன் கூட்டுறவுச் சார்பதிவாளர் மணப்பாறை |
| ,, | காலை 11மணி | கரூர் கிழக்கு | 1 | 30-9-7[illegible] | ,, ,, |

நள்ளிரவு 1 மணி வரை நடந்த பேச்சுவார்த்தை

# பி அண்டு சி மில் தகராறு தீர்ந்தது: ராசாராம் முயற்சி வெற்றி

**சென்னை, மார்ச் 9—சென்னை பி அண்டு சி மில் தகராறு தீர்ந்தது. அமைச்சர் ராசாராம் முயற்சி வெற்றிபெற்றது. வருகிற திங்கட்கிழமை தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்புகிறார்கள்.**

பி. அண்டு சி. மில் தொழிலாளர் தகராறு குறித்து, சென்னை கோட்டையில், தொழிலாளர் நல அமைச்சர் ராஜாராம் முன்னிலையில் நேற்று பேச்சுவார்த்தை நடந்தது.

இந்தப் பேச்சுவார்த்தை இரவு ஒரு மணி வரை நடந்தது.

நிர்வாகத்தினர் சார்பில் பட், சம்பத், உன்னி கிருஷ்ணன் ஆகியோரும், தொழிலாளர்கள் சார்பில் அந்தோணிப்பிள்ளை, ராகவானந்தம், சி. கே. நாராயணன், சுந்தரமூர்த்தி, துரைராஜ் ஆகியோரும் பேச்சுவார்த்தையில் கலந்துகொண்டனர்.

இந்தப்பேச்சுவார்த்தையில் சமரஸ உடன்பாடு ஏற்பட்டது.

அதைத் தொ[illegible]ர்ந்து, 11-ந் தேதி (திங்கட்கிழமை) முதல் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்புகிறார்கள்.

## உடன்பாடு விவரம்

உடன்பாட்டில் குறிப்பிடப் பட்டுள்ள விவரங்கள் வருமாறு:—

1. தொழிலாளர்களுக்கு 1-1-74 முதல் ரூ. 7½ சம்பள உயர்வு அளிக்கப்படும்.

2. இதுதவிர, 1—1—76 முதல் மேலும் ரூ. 7½ சம்பள உயர்வு கொடுக்கப்படும்.

3. இந்த சம்பளஉயர்வில், இரவுப்படி முதலானவை சேராது.

4. சென்னை நகர வாழ்க்கை செலவுப்புள்ளி 340-க்கு மேல் 1 புள்ளிக்கு 29 காசு வீதம் 1—1—74-ல் இருந்தும், 30 காசு வீதம் 1—1—76-ல் இருந்தும் கிராக்கிப்படி உயர்வு அளிக்கப்படும்.

5. சமரச உடன்பாடு ஏற்பட்டதையொட்டி, தொழிலாளர்களுக்கு தலா ரூபாய் 200 வழங்கப்படும். இம்மாதக் கடைசிக்குள் ஒரு தவணையாகவும், மேலும் 3 மாத காலத்திற்குள் மற்றொரு தவணையாகவும் இந்தப் பணம் கிடைக்கும்.

6. வேலைநிறுத்த காலத்தை சம்பளத்தோடு கூடிய விடுமுறை நாட்களுடன் கழித்துக் கொள்வதற்கு வகை செய்யப்படும்.'' மேற்கண்டவாறு உடன்பாட்டில் கூறப்பட்டுள்ளது.

# கல்பாக்கம் அணுமின் நிலைய வேலையில் தாமதம்

புதுடெல்லி, மார்ச் 9—தமிழ்நாட்டில் கல்பாக்கத்தில் கட்டப்படும் அணுமின்சார நிலையம், ராஜஸ்தானில் கோட்டாவில் அணுமின்சார நிலையத்தின் இரண்டாவது கட்ட விஸ்தரிப்பு ஆகியவற்றின் கட்டுமான வேலை திட்டமிடப்பட்டதைவிட தாமதமாக நடந்து வருவதாக ராஜ்ய சபையில் பிரதமர் இந்திரா காந்தி தெரிவித்தார்.

வெளி நாடுகளிலிருந்தும், உள் நாட்டிலும் இவற்றுக்கான சாதனங்கள் கிடைப்பதில் தாமதம் ஏற்பட்டுள்ளது. மற்றும் தொழில் நுட்பப் பிரச்னைகள், மின் வெட்டு, கட்டுமானப் பொருள் பற்றுக்குறை ஆகியவை இதற்குக் காரணங்களாகும் என்று பிரதமர் இந்திரா கூறினார்.

புதுவையில், என். ராமச்சந்திரன் அமைச்சர் பதவி ஏற்ற போது எடுத்த படம்.

# அ.தி.மு.க மந்திரிகளின் அதிகார துஷ்பிரயோகம்: கவர்னரிடம் மகஜர்

புதுவை, மார்ச் 9—

**“புதுவை, அ தி. மு. க. மந்திரிகள், தங்களுக்குள்ள அதிகாரத்தைப் பயன்படுத்தி, தங்களுக்கு ஆதரவாக எம். எல். ஏ.க்களைச் சேர்க்க (மெஜாரிட்டி பெற) முயற்சிக்கிறார்கள்'' என்று புதுவை கவர்னரிடம் மகஜர் கொடுக்கப்பட்டுள்ளது.**

இன்னும் மூன்று நாளில் பாண்டிச்சேரி சட்டசபையைக் கூட்டவேண்டும் என்றும் அந்த மகஜரில் கோரப்பட்டுள்ளது.

புதுவை முன்னாள் முதல்வர் பரூக் மரைக்காயர், புதுவை சட்டசபை காங்கிரஸ் கட்சித் தலைவர் தனகாந்தராஜ், சுயேட்சை உறுப்பினர் காமிச் செட்டி ஆகியோர் இந்த மகஜரைக்கொடுத்துள்ளனர்.

பாண்டிச்சேரி சட்டசபைக்கு நடந்த தேர்தலில், எந்த கட்சிக்கும் மெஜாரிட்டி (பெரும்பான்மை) கிடைக்கவில்லை.

மொத்தம் உள்ள 30 இடங்களில் 14 இடங்களில் வெற்றி பெற்ற அ.தி.மு.க. கூட்டணி (அ.தி.மு.க. 12; வ. கம்யூனிஸ்டு 2) மந்திரிசபை அமைத்துள்ளது.

மைனாரிட்டி கட்சியை மந்திரிசபை அமைக்க அனுமதித்ததற்கு கடும் எதிர்ப்பு உருவாகி உள்ளது.

முன்னாள் முதல் அமைச்சர் பரூக் மரக்காயர் (தி. மு. க) சட்டசபை காங்கிரஸ் கட்சி தலைவர் தனகாந்தராஜ், சட்டசபை சுயேச்சை உறுப்பினர் காமிசெட்டி ஆகியோர் நேற்று கவர்னர் சேத்திலாலை சந்தித்தனர்.

அவர்கள் தனித்தனியாக மூன்று மனுக்களை கொடுத்தனர்.

அந்த மனுக்களில் கூறப்பட்டிருந்ததாவது:—

## அதிகார துஷ்பிரயோகம்

''மைனாரிட்டி கட்சியை மந்திரிசபை அமைக்க அனுமதித்ததை, கடுமையாக எதிர்க்கிறோம்.

அ.தி.மு.க.மந்திரிகள், தங்களிடம் உள்ள அதிகாரத்தைப் பயன்படுத்திக்கொண்டு, தங்களுக்கு ஆதரவு திரட்ட முயற்சி செய்கிறார்கள்.

## 3 நாள் கெடு

எனவே, மந்திரிசபைக்கு சட்டசபையில் எந்த அளவு ஆதரவு இருக்கிறது என்று பலப்பரீட்சை பார்க்க, இன்னும் 3 நாட்களில் சட்டசபையை கூட்டவேண்டும் என்றுகேட்டுக்கொள்கிறோம்.

இவ்வாறு கவர்னரிடம் கொடுத்த மனுக்களில் கூறப்பட்டு இருந்தது.

## கவர்னர் பரிசீலனை

இந்த கோரிக்கையை பரிசீலனை செய்வதாக, கவர்னர் சேத்திலால் பதில்அளித்தார்.

பாண்டிச்சேரி சட்டசபையில், கட்சிகள் நிலவரம் வருமாறு:—

| | |
|---|---|
| மொத்த இடங்கள் | 30 |
| அ. தி. மு. க. | 12 |
| வ. கம்யூனிஸ்டு | 2 |
| இ. காங்கிரஸ் | 7 |
| ப. காங்கிரஸ் | 5 |
| தி. மு க | 2 |
| இ. கம்யூனிஸ்டு | 1 |
| சுயேச்சை | 1 |

# எம். ஜி. ஆரே பதில் எங்கே? புதுவை தி. மு. க. கேள்வி

புதுவை, மார்ச் 9—''புதுவையில் அ.தி.மு.க. ஆட்சிக்கு வந்தால், அமைச்சர்களைத் தொண்டர்களைக் கொண்டுதான் தேர்ந்தெடுப்போம்'' என்று எம். ஜி. ஆர். கூறியிருந்தார் அல்லவா?

''இப்போது புதுவையில் அ.தி.மு.க. அமைச்சர்களாக அறிவிக்கப்பட்டுள்ள 4 பேர்களையும் எம். ஜி. ஆர்.தான் வித்தார்.

எந்தத் தொண்டர்களையும் கொண்டு அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கவில்லை. இதற்கு புதுவை மாநில தி. மு. கழகம் கடும் எதிர்ப்புத் தெரிவித்துள்ளது.

இந்தக் கண்டனத்தை தெரிவிக்க புதுவை தி. மு. க. வின் சார்பில் ''எம். ஜி. ஆரே பதில் எங்கே?'' என்ற தலைப்பில் துண்டுப் பிரசுரமும் வெளி[illegible]ப்பட்டுள்ளது.

அதில் கூறப்பட்டிருப்பதாவது:—

''அமைச்சர்களைத் தொண்டர்களே அன்பாகத் தேர்ந்தெடுப்பர்'' என்று அழகாகப் பேசினீர்களே! அறிவிக்கப்பட்ட அமைச்சர்கள் அப்படித்தான் தேர்ந்தெடுக்கப்பட்டனரா? அறிய விரும்புகிறோம்! அறிவிப்பீரா?

தி. மு. கழகம் வட்டம்-11 புதுவை-1.

மேற்கண்டவாறு அந்த துண்டுப் பிரசுரத்தில் கூறப்[illegible]டுள்ளன.

# சீனிவாசன் விவகாரம்

1-ம் பக்கத் தொடர்ச்சி

வித்துக் கொள்கிறேன். நேரத்தை மிச்சப்படுத்த வேண்டும் என்றால் சுதந்திர கட்சி இரண்டுங்கெட்டான் நிலையில் இல்லாமல் ஆளும் கட்சியோடு சேர்ந்திருக்கலாம்'' என்றார் சீனிவாசன்.

ஹாண்டே (அ.தி.மு.க.), ஒரு ஒழுங்குப் பிரச்னை கிளப்பினார்.

துணை சபாநாயகர்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் வரும்போது அதற்கான வழிமுறைகள் என்ன என்பதை சபாநாயகர் சொல்ல வேண்டும். முன்பு மதியழகன் பிரச்னை வந்தபோது, விளக்கம் தர அவருக்கு சந்தர்ப்பம் அளிக்கப்படவில்லை. இப்போது அவ்வித சந்தர்ப்பம் அளிக்கப்படுமா?

சபாநா[illegible]கர்; விவாதம் நடக்கும்போது அதில் முறைகேடு இருந்தால், அதில் ஒழுங்குப் பிரச்னை கிளப்பலாம்.

அதன் பிறகு சீனிவாசனை துணை சபாநாயகர் பதவியிலிருந்து நீக்கக் கோரும் தீர்மானத்தை கந்தப்பன் முன்மொழிய சுருளிவேல் வழி மொழிந்தார்.

சந்தப்பன் கூறியதாவது:—

மிகுந்த பொறுப்பு உணர்ச்சியோடும், கவலையோடும் அந்த தீர்மானத்தைதந்திருக்கிறேன். மக்கள் கட்சி ஆட்சி முறை நடக்கும்போது மன்ற மரபுகள், உரிமைகள் பாதுகாக்கப்படுவது முக்கியம். சட்ட வரம்புக்குட்பட்டு நான் முன்மொழிகிறேன். எந்த செய்தியேட்டுக்கும் நான் எனது தீர்மானத்தை கொடுக்கவில்லை.

ஒரு நபர் நம்பிக்கையில்லை என்று தெரிவித்தால் கூட, பொறுப்பில் நான் நீடிக்க மாட்டேன் என்று சீனிவாசன் முன்பு கூறினார். அந்த ஜனநாயக மரபுக்கு மதிப்பு தரும் வாய்ப்பை சீனிவாசன் நழுவவிட்டார். பெரும்பான்மையினர் அவர் மீது நம்பிக்கையில்லை என்று கூறுவதைவிட பெரும்பான்மையினரின்மீது நமக்குநம்பிக்கை இல்லை என்ற முடிவுக்கு அவர் வந்துவிட்டார்.

ஒரு வார்த்தையில் இந்தத் தீ[illegible]மானத்தை நான்கொண்டு வந்ததற்கு காரணம் என்னவென்றால், மறைமுகமாக ஒரு காரியம் செய்யப்படுகிறது என்ற உணர்ச்சி ஏற்படக் கூடாதுஎன்பதற்காகத்தான்.

இந்தப் பிரச்னை, சிந்தித்து பேசவேண்டிய விஷயமாகும்.

பெரும்பான்மையினர் மீது தமக்கு நம்பிக்கை இல்லை என்று சீனிவாசன் தெரிவித்துள்ளதால் வேறு வழியின்றி இந்தத் தீர்மானத்தை கொண்டு வருகிறேன்'' என்றார் கந்தப்பன்.

# நடிகர் சந்திரபாபுவின் சவப் பெட்டியை சிவாஜி சுமந்து சென்றார்

**சென்னை, மார்ச் 9—பிரபல நகைச்சுவை நடிகர் சந்திரபாபு நேற்று மரணம் அடைந்தார் அல்லவா? அவருடைய இறுதி ஊர்வலம் நேற்று மாலை நடந்தது. சந்திரபாபுவின் உடல் வைக்கப்பட்ட பெட்டியை சிவாஜி சுமந்துசென்று காரில் வைத்தார்.**

4-15 மணிக்கு, சந்திரபாபுவின் உடல், சவப் பெட்டியி[illegible] வைத்து மூடப்பட்டது.

பெட்டியை சிவாஜி கணேசன், முத்துராமன், ஏவி எம். ராஜன், மனோகர், நாகேஷ், சுந்தரராஜ[illegible] ஆகியோர் தாங்கிச் சென்று [illegible]ல் ஏற்றினார்கள்.

பிறகு இறுதி ஊர்வலம் புறப்பட்டது. ஊர்வலத்தில் திரளான நடிகர்—நடிகைகள் கலந்து கொண்டனர்.

ஊர்வலம். சாந்தோமில் உள்ள கிறிஸ்தவ கோவிலை (சர்ச்) அடைந்தது. அங்கு, சந்திரபாபு உடல் வைக்கப்பட்டிருந்த சவப் பெட்டியை வைத்துஜெபம்செய்தார்கள். பிறகு மயிலாப்பூர் கல்லறைக்குச் சவப்பெட்டி எடுத்துச் செல்லப்பட்டது. அங்கு கிறிஸ்தவ முறைப்படி அடக்கம் செய்யப்பட்டது.

# டி.டி.கே. மறைவு: எம்.ஜி. ஆர். அனுதாபம்

சென்னை, மார்ச் [illegible] டி. டி. கிருஷ்ணமாச்சாரி மறைவுக்கு அ. தி. மு. க. பொதுச் செயலாளர் எம். ஜி. ஆர். அனுதாபம் தெரிவித்துள்ளார்.

''அரசியலில் தீரம்கொண்டிருந்தவரும் ஆற்றலும் அனுபவமும் மிக்க வருமான ஒரு தலைவரை இந்நாடு இழந்து விட்டது'' என்று எம்.ஜி.ஆர். தனது அனுதாபச் செய்தியில் கூறியுள்ளார்.

தனது சார்பிலும் அ தி மு க சார்பிலும் அவர் டி. டி. கே. யின் குடும்பத்தினருக்கு அனுதாபத்தைத் தெரிவித்துள்ளார்.

## நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், மார்ச் 8—

| | |
|---|---|
| ஆரம்ப விலை | 60. 80 |
| முடிவு விலை | 60. 80 |

## திருமணம்

சேலம், மார்ச் 9—சேலம் செவ்வாய்ப்பேட்டை ஏ. ஏ. ராமராவின் மூத்த புதல்வர் ஏ. ஆர். ராமமூர்த்திக்கும், கே. லட்சுமி நரசிம்மனின் புதல்வி பத்மாவதிக்கும் செவ்வாய்ப்பேட்டை ரெங்கா மஹால் கல்யாண மண்டபத்தில் இந்த மாதம் 7-ந் தேதியன்று திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

# தனக்கே அபராதம் விதித்துக்கொண்ட நீதிபதி

நியூயார்க், மார்ச் 9—அமெரிக்காவில் நீதிபதி ஒருவர் தனக்குத்தானே அபராதம் விதித்துக்கொண்டார்.

அவர் அப்படி அபராதம் விதித்துக்கொள்ள என்ன குற்றம் செய்தார்? கோர்ட்டுக்கு 10 நிமிஷநேரம் தாமதமாக வந்தார்.

கோர்ட்டுக்குத் தாமதமாக வந்தது, கோர்ட்டை அவமதித்த குற்றமாகுமென்று கூறி அவர் தனக்குத் தானே 50 டாலர் (சுமார் ரூ. 350) அபராதம் விதித்துகொண்டு அபராதத் தொகையைக் கட்டினார்.

அந்த நீதிபதியின் பெயர் ரால்ப் கான். அமெரிக்காவில் மிச்சிகன் மாகாண ஏட்ரியன் நகர கோர்ட்டில் அவர் நீதிபதியாக இருக்கிறார்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திண்டுக்கல் | காலை 9மணி | இ.நீ.கூ.க. தலைவர்கள் | 2 | 30-9-76 | (ஓ-ம்) பி. கணேசன் கூட்டுறவுச் சார்பதிவாளர் திண்டுக்கல் |
| | காலை 11மணி | சாணார்பட்டி | 1 | 30-9-76 | ,, ,, |
| | பகல் 1 மணி | வடமதுரை | 1 | 30-9-76 | ,, ,, |
| உசிலம்பட்டி | காலை 9மணி | உசிலம்பட்டி | 1 | 30-9-76 | (ஓ-ம்) கிளாரன்ஸ்அமர்நாத் கூட்டுறவு விரிவு அலுவலர் உசிலம்பட்டி |
| | காலை 11மணி | கருமாத்தூர் | 1 | 30-9-76 | ,, ,, |
| | காலை 9மணி | ஊத்தப்ப நாயக்கனூர் | 1 | 30-9-76 | (ஓ-ம்) டி.தேவராசன் கூட்டுறவுச் சார்பதிவாளர் உசிலம்பட்டி |
| | காலை 11 மணி | அல்லிக்குண்டம் | 1 | 30-9-76 | ,, ,, |
| பழநி | காலை 9மணி | கோதைமங்கலம் | 1 | 30-9-76 | (ஓ-ம்) சி. நடராசன் கூட்டுறவுச் சார்பதிவாளர் பழநி |
| கோவில்பட்டி | காலை 9மணி | கோவில்பட்டி | 1 | 30-9-76 | (ஓ-ம்) பி. கிருஷ்ணமூர்த்தி கூட்டுறவுச் சார்பதிவாளர் கோவில்பட்டி |
| ,, | காலை 11மணி | ஓட்டப்பிடாரம் | 1 | 30-9-76 | ,, ,, |
| வாலாஜா | காலை 9மணி | இ.நீ.கூ.க. தலைவர்கள் | 1 | 30-9-76 | (ஓ-ம்)கே. சோமசுந்தரம் கூட்டுறவுச் சார்பதிவாளர் ஆற்காடு |
| ,, | காலை 11மணி | ஆற்காடு | 1 | 30-9-76 | ,, ,, |
| ,, | பகல் 1 மணி | திமிரி | 1 | 30-9-76 | ,, ,, |
| ஆம்பூர் | காலை 9மணி | இ.நீ.கூ.க.தலைவர்கள் | 2 | 30-9-76 | (ஓ-ம்) கே.குப்பன் கூட்டுறவுச் சார்பதிவாளர் ஆம்பூர் |
| ,, | காலை 11மணி | தொகுதி 3 | 1 | 30-9-76 | ,, ,, |
| ,, | பகல்1மணி | தொகுதி4 | 1 | 30-9-76 | ,, ,, |
| செங்கம் | காலை 9மணி | இ.நீ.கூ.க.தலைவர்கள் | 1 | 30-9-76 | (ஓ-ம்) வி.எஸ்.பி.[illegible] கூட்டுறவுச் சார்பதிவாளர் செங்கம் |
| ,, | காலை11மணி | செங்கம் | 1 | 30-9-76 | ,, ,, |
| ,, | காலை 9மணி | கரியமங்கலம் | 1 | 30-9-76 | (ஓ-ம்) ஈ. குப்புசாமி கூட்டுறவுச்சார்பதிவாளர் செங்கம் |
| ,, | காலை11மணி | மேலபள்ளிப்பட்டு | 1 | 30-9-76 | ,, ,, |
| பொன்னேரி | காலை 9மணி | இ.நீ.கூ.க.தலைவர்கள் | 2 | 30-9-76 | (ஓ-ம்) சி.ஆர்.துரைராஜ் கூட்டுறவுச் சார்பதிவாளர் பொன்னேரி |
| | காலை11மணி | தொகுதி 3 | 1 | 30-9-76 | ,, ,, |
| | பகல்1மணி | தொகுதி 6 | 1 | 30-9-76 | ,, ,, |
| திருத்தணி | காலை 9மணி | திருத்தணி | 1 | 30-9-76 | (ஓ-ம்) ஆர். சுப்பிரமணியம் கூட்டுறவுச் சார்பதிவாளர் திருத்தணி |
| ,, | காலை11மணி | கிருஷ்ணசமுத்திரம் | 1 | 30-9-76 | ,, ,, |
| திருவள்ளூர் | காலை 9மணி | இ.நீ.கூ.க. தலைவர்கள் | 2 | 30-9-76 | (ஓ-ம்)எல். சுப்பிரமணியம் கூட்டுறவுச் சார்பதிவாளர் திருவள்ளூர் |
| ,, | காலை 11மணி | திருவள்ளூர்நகரஎல்லை | 1 | 30-9-76 | ,, ,, |
| ,, | பகல்1மணி | பாந்தூர் | 1 | 30-9-76 | ,, ,, |
| பூந்தமல்லி | காலை 9மணி | இ.நீ.கூ.க.தலைவர்கள் | 1 | 30-9-76 | (ஓ-ம்) டி.பி. குலசேகரன் கூட்டுறவுச் சார்பதிவாளர் காஞ்சிபுரம் |
| ,, | காலை11மணி | பூந்தமல்லி | 1 | 30-9-76 | ,, ,, |
| ,, | பகல்1மணி | குன்றத்தூர் | 1 | 30-9-76 | ,, ,, |

தேதி: 9—3—74

குறிப்பு:— இ. நீ. கூ. க. — இறைவை நீர்ப்பாசனக் கூட்டுறவுக் கழகம்.
வே.பொ.கூ.சு.க.— வேளாண்மைப் பொறியியல் கூட்டுறவுக் கழகக் கமிட்டி.






# லதாவிடம் வம்பு செய்த வாலிபனுக்கு உதை

கல்லூரி நீச்சல் குளத்தில் குளிக்க கீதா தனது தோழிகளுடன் வருகிறாள். அவளைப் பின் தொடர்ந்து ஒருவன் வருகிறான்.

மெல்ல அருகில் நெருங்கி, ''என்ன டிம்பிள் கபாடியாங்கிற நினைப்பா?'' என்று அவன் கிண்டல் செய்கிறான்.

இதைக் கேட்டதும் கீதா கடுங்கோபம் கொள்கிறாள் அருகில் இருந்த ஒரு கட்டையை எடுத்து தலையில் அடிக்கிறாள். அவன் அப்படியே சுருண்டு விழுந்து விடுகிறான்.

இந்த சமயத்தில் அங்கு வந்த கீதாவின் காதலன் விவரம் அறிந்து அடிபட்ட இளைஞனைத் தொட்டுப் பார்த்து அதிர்ச்சி அடைகிறான்.

இக்காட்சி ஆஞ்சனேயாவின் ''சொர்க்கத்தில் திருமணம்'' படத்திற்காக ஓய். எம். சி. ஏ. அருகில் படமாக்கப்பட்டது.

கீதாவாக லதாவும், அவரது காதலன் பாலுவாக ரவிச்சந்திரனும், வம்பிழுக்கும் வாலிபனாக, ஜூனியர் பாலையாவும் நடித்தனர்.

டி. ஆர். ராமண்ணா டைரக்ட் செய்தார். வசனங்களை டி. என். பாலு எழுதுகிறார். டி. கே. சங்கர் மூலக்கதை எழுதியுள்ளார்.



''வாணி—ராணி'' படத்தில் சிவாஜி, வாணிஸ்ரீ.

# ஏ. எம். ராஜா, ஜிக்கி மெல்லிசை நிகழ்ச்சி

திரைப்பட இசையமைப்பாளர் ஏ. எம். ராஜா, ஜிக்கி குழுவினரின் மெல்லிசை விருந்து சென்னை, அடையாறு ஈராஸ் தியேட்டரில் நாளை (ஞாயிறு) காலை 9-30 மணிக்கு நடைபெறும்.

## "அன்னைக்காக" துவங்கியது

தி நியூ [illegible]யேட்டர்ஸின் 'அன்னைக்காக' படப்பிடிப்பு துவங்கியது.

லட்சுமி, வி.கே. ராமசாமி ஆகியோர் நடித்த காட்சிகள் சாரதா ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டன.

ப. நீலகண்டன் கதை வசனம் எழுதுகிறார்.

ஏ. ஜெகந்நாதன் டைரக்ட் செய்கிறார். சங்கர், கணேஷ் இசை அமைக்கின்றனர்.

இ. ஆர். சரஸ்வதி, பட்டுக்கோட்டை வி. சாரதி, வி. எஸ். வாசன் ஆகியோர் தயாரிக்கின்றனர்.

## முத்துராமன் ஏவி. எம். ராஜன்

நாவலர் பள்ளிக் கட்டிட நிதிக்காக நடிகர் முத்துராமன் தலைமையில், ஏவி. எம். ராஜன், புஷ்பலதா, ஜெயா, ஸ்ரீவித்யா, குட்டி பத்மினி, விஜயகுமார், மாஸ்டர் சேகர் ஆகியோர் முன்னிலையில் இந்த நிகழ்ச்சி நடக்கிறது.

# மாணிக்கத் தொட்டில்

திருமணமே வேண்டாம் என்று இருக்கும் இருவரை சூழ்நிலை கணவன் மனைவியாக்குகிறது.

குழந்தைகளே வேண்டாம் என்கிற அவர்கள் ஆண் குழந்தை வேண்டுமென்கிற ஆசையினால் வரிசையாக 5 பெண் குழந்தைகளை பெற்றெடுக்கிறார்கள். பருவம் அடைந்த தன் பெண்களுக்கு திருமணம் செய்ய அவர்கள் படும் சிரமத்தையும், புகுந்த வீடு சென்ற பெண்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணத்திற்காக பிறந்த வீட்டிற்கே ஓடி வருவதையும் சித்தரிக்கும் உருக்கமான கதை.

## விமர்சனம்

கருத்துள்ள கதைக்கு சத்தான சுவையுள்ள வசனங்களை பால முருகன் எழுதியுள்ளார்.

பெற்றோராக ஜெமினி கணேசனும், கே. ஆர். விஜயாவும் நடிக்கின்றனர். ஆண் குழந்தைக்காக ஆசையுடன் காத்திருந்து அது பெண் குழந்தை என்பதை அறிந்து சலித்துக்கொள்வதும் தனிமையில் ஆவலுடன் கொஞ்சுவதும் நன்றாக உள்ளது. தன்னிடம் வேலை பார்த்தவனிடம் தனக்கு ஒரு வேலை கேட்கும், போதும் ஸ்கூட்டரை விற்று விட்டு மனைவியிடம் அதைச் சர்வசாதாரணமாகச் சொல்லும்போதும் ஜெமினி அருமையாக நடித்திருக்கிறார்.

கணவன் தற்கொலை செய்து கொள்ள விஷம் வாங்கி வந்திருப்பதை அறிந்து தனது பெண்களை வெளியே விரட்டி அடிக்கும் கட்டத்தில் விஜயாவின் நடிப்பு நேர்த்தியாக உள்ளது.

நாகேஷ், சரளா ஜோடி நகைச் சுவையை தாராளமாக வழங்குகின்றனர்.

ஸ்ரீகாந்த், விஜயகுமார், சண்முக சுந்தரம் சுபா, விஜய சந்திரிகா ஆகியோர் சிறு வேடங்களில் நடித்தாலும் குறை வைக்கவில்லை.

புதுமுகங்கள் கே. விஜயா, சுனந்தினி, மோனி ராதிகா, விஜயகீதா ஆகியோர் அழகாக வந்துபோகின்றனர்.

விஸ்வநாதன் இசையமைத்திருக்கிறார்.

'ராஜாத்தி பெற்றெடுப்பாள் ராஜகுமாரன்' பாடல் கேட்கும்படி இருக்கிறது.

பி. மாதவன் டைரக்ஷனில் படத்தின் முற்பகுதியை விட பிற்பகுதியில் விறுவிறுப்பு அதிகம்.

மொத்தத்தில் — பெண்களைக் கவரும் தொட்டில்.



# ஏவி. எம். ராஜன் ரசிகர் மன்றம் துவக்க விழா

ஏவி. எம். ராஜன் ரசிகர் மன்றத் துவக்க விழா சென்னை பாரத் தியேட்டரில் நடைபெற்றது.

மன்ற பெயர்ப் பலகையை நடிகர் டி. கே. பகவதி திறந்து வைத்தார். திரைப்பட இயக்குநர் தில்லை ராகவன் ஏவி. எம். ராஜனின் உருவப் படத்தைத் திறந்து வைத்தார்.

விழாவில் வி. எஸ். ராகவன், முத்துப்பேட்டை அலி, டைப்பிஸ்ட் கோபு, சேஷாத்திரி ஆகியோர் பேசினார்கள். மன்றச் செயலாளர் எஸ். மோகன்குமார் நன்றி கூறினார். ஏ. சுந்தரம், பாபு இருவரும் வரவேற்றனர்.

# 'உங்கள் விருப்பம்'

ஸ்ரீ சித்ரமகால் பட நிறுவனத்தார் 'உங்கள் விருப்பம்' என்ற பெயரில் முழுநீள நகைச்சுவைப் படமொன்றை தயாரிக்கின்றனர்.

மாடர்ன் தியேட்டர் ஸ்டுடியோவில் படப்பிடிப்பு துவங்கியது.

ஜெய்சங்கர், ஜெய்சித்ரா, வி. கே. ராமசாமி, சோ, மனோரமா, தேங்காய் சீனிவாசன், ஏ. சகுந்தலா, எஸ். என். லட்சுமி, எம். ஆர். ஆர். வாசு, [illegible] ஏ. தங்கவேலு, சசிகுமா[illegible] அருளிராஜன் ஆகியோர் நடிக்கின்றனர்.

பஞ்சு அருணாசலம் கதை வசனம் எழுதுகிறார். கண்ணதாசன் பாடல்களை எழுதுகிறார். விஜயபாஸ்கர் இசையமைக்கிறார்.

திரைக் கதை எழுதி கே. கிருஷ்ணமூர்த்தி டைரக்ட் செய்கிறார்.



# அகில உலக பெண்கள் மல்யுத்தப் போட்டி: சென்னையில் நடக்கிறது

பெண்களுக்கான மல்யுத்த 1974-ம் ஆண்டு உலகச் சாம்பியன் போட்டி சென்னையில் நடக்கிறது. வருகிற மார்ச் 16, 17, 18 ஆகிய 3 நாட்களிலும் நேரு ஸ்டேடியத்தில் இரவு 6-30 மணிக்கு மல்யுத்தப் போட்டி நடைபெறும்.

அமெரிக்கா, ரஷ்யா, இங்கிலாந்து, சுவிட்சர்லாந்து, ஆப்பிரிக்கா, பிரஞ்சு நாடுகளைச் சேர்ந்த மல்யுத்த வீராங்கனைகள் போட்டியில் மோத சென்னைக்கு வருகிறார்கள்.

வெளிநாட்டுப் பெண்கள் தமிழக வீராங்கனைகளோடும் போட்டியிடத் தயார் என்று தெரிவித்துள்ளனர்.

தங்களை போட்டியில் வெல்பவர்களுக்கு ஆயிரம் ரூபாய் பரிசு அளிப்பதாகவும் கூறியிருக்கின்றனர்.

இந்தப் போட்டியின் முடிவில் அகில உலக வீராங்கனை தேர்ந்தெடுக்கப்படுவார்.

இந்தப் பெண்கள் மல்யுத்தப் போட்டிக்கான சிறப்பான ஏற்பாடுகளை வர்கிஸ், முகர்ஜி ஆகியோர் செய்து வருகின்றனர்.

## இன்றைய சினிமா

**சென்னை**

ராம் — மாணிக்கத் தொட்டில்
ஈராஸ் — சொல்லத்தான் நினைக்கிறேன்
நேஷனல் — அவசரக் கல்யாணம்
நியூ எல்பின்ஸ்டன் — ஜீவிக்கான் மறன்னு போய ஸ்திரி (மலையாளம்)

**தாம்பரம்**

நேஷனல் — மாணிக்கத் தொட்டில்
எம். ஆர். தியேட்டர் — சமையல்காரன்
ஸ்ரீசித்ரா — பூக்காரி

**வில்லிவாக்கம்**

ராயல்: பத்துமாத பந்தம்

**குரோம்பேட்டை**

வெற்றி: கணவனே கண்கண்ட தெய்வம்

# நடிகை ஜெயந்தி மகன் பிறந்தநாள்

நடிகை ஜெயந்தி, பெக்கட்டி சிவராம் தம்பதிகள் மகன் குமாரின் 4-வது பிறந்த நாள் தியாகராயநகர் பாலாஜி கல்யாண மண்டபத்தில் நடைபெற்றது.

திரையுலகத்தினர்களும், பத்திரிகையாளர்களும் திரளாக வந்து குமாரை வாழ்த்தினர்.

# 'பெண்ணே உலகின் கண்ணே'

முத்துராமன், தேவிகா இணைந்து நடிக்கும் 'பெண்ணே உலகின் கண்ணே' படப்பிடிப்பு பிரசாத் ஸ்டுடியோவில் துவங்கியது.

இறைமுடிமணி கதை வசனம் எழுதுகிறார் தேவதாஸ் டைரக்ட் செய்கிறார்.



'உணர்ச்சிகள்' படத்தில் லீலா, வி. கோபாலகிருஷ்ணன், எஸ். வி. ராமதாஸ்.



Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4 South Bank Road, Madras-600028, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Chief Editor: S. V. G. Sowrirajulu.

Honorary Editor: N. Muthukumarasamy.